# மங்கையர் மலர்

பிப்ரவரி '88 விலை ரூ. 4.



## ஆண்டு மலர் &
## ஆசிரியைகள் சிறப்பிதழ்

# உங்கள் கேசத்திற்கு முழுப் பராமரிப்பு இப்பொழுது அளிக்கலாம்.

உங்கள் கேசத்தைப் பட்டு இழைபோல் ஆக்குங்கள்.

அதற்கு மினுமினுப்பு, மற்றும் பளபளப்பு ஊட்டுங்கள்.

மென்மையான கோகுல் ஹெர்பல் ஷாம்புவின் விசேட பராமரிப்புடன் அதனைக் கொஞ்ச விடுங்கள். இந்த ஷாம்புவில் உங்கள் கேசத்தைப் பதப்படுத்த அடங்கியுள்ளன, மருதாணியின் இயற்கை சாறு; கேசம் அடர்ந்து வளர, மற்றும் கேசத்திற்கு ஊட்டமளிக்க புரத சத்து. எனவே கேசம் ஆரோக்கியமாகத் தோற்றமளிக்க, வைட்டமின் சிகிச்சை பெறுகிறது.

இந்த ஷாம்பு, பெரும் பாலானவற்றைவிடசிறப்பாக உழைக்கிறது; சிறந்த விளைவுகளைத் தருகிறது. இன்றே உபயோகித்துப் பாருங்கள்; நாங்கள் கூறுவது நிச்சயமாக நிரூபணமாகும்.




## கோகுல்
### ஹெர்பல் ஷாம்பூ

உங்கள் கேசத்திற்குப் பரிசுத்தம், பதம் மற்றும் பராமரிப்பு அளித்திட.

Dattaram TSR 1C/87 TAM





# எனக்குச் சில சந்தேகங்கள்!

## மஞ்சுளா ரமேஷ்

சந்தேகம் நெ. 1...

இன்றைக்குப் பெண்கள் படிக்க ஆரம்பித்து விட்டார்கள். நிறைய பட்டங்கள் பெயருக்குப் பின்னாடி... சாதனைகளா... அதற்கு மேல்.... கேட்கவே வேண்டாம். ஆனால் நாளுக்கு நாள் இந்த பெண்களில் ஏமாந்த சோணகிரிகளின் எண்ணிக்கையும் அதிகமாகிக் கொண்டு வருகிறதே. அது ஏன்?

ஆண்கள் திருமணம் செய்து கொண்டு எத்தனை பெண்களை ஏமாற்றி இருக்கிறார்கள்? திருமணத்தையும், செய்து கொண்டு, அவளுக்குக் கையில் குழந்தையையும் கொடுத்து, அவள் பணத்தையும் சுருட்டிக் கொண்டு ஓடும் ஆண்கள் மிகவும் அதிகமாகி விட்டார்களே....

டபுள் கிராஜுவேட்டையெல்லாம் கல்யாணம் பண்ணிக் கொண்ட ராகவனையெல்லாம் பேப்பரில் படிக்கிறோமே? அப்படியும் இன்றைக்கும் போகத் திக்கில்லாமல் கையில் குழந்தையுடன் நிற்கும் (படித்த!) பெண்கள் தான் அதிகமாகிறார்கள், ஏன்?

திருமணம் என்றாலே ஒரு கிளுகிளுப்பையும் ஊட்டி, பெரிய சென்டிமென்ட்டையும் ஏற்படுத்தி, பாரத கலாசாரத்தையெல்லாம் அதில் புகுத்திவிட்டதாலா...? அதனால் தாலி ஏறினவுடனே என் கணவன் ராமன் என பெண்கள் நம்பி சகலமும் அவனே என எல்லாவற்றையும் கொடுத்துவிடும்படி நாம் பெண்களை வளர்ப்பதாலா...? அருமை பெருமையாகப் பெண்ணை வளர்த்தாலும் வயதுக்கு வந்தவுடன் அவளை வீட்டை விட்டு அனுப்பினால் போதும் என நினைக்கும் பெற்றோர்களாலா...? ஜாதகம் பொருத்தம் பார்ப்பவர்கள் கொஞ்சம் மனப் பொருத்தம் பார்த்தாலென்ன...? அண்டை அயலாரை விசாரித்தால் என்ன...?

இன்னும் நம்பி நம்பியே மோசம் போகும் பெண்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாகிறதே ஏன்... ஏன்...?

சந்தேகம் நெ. 2...

பெண்கள் கஷ்டமெல்லாம் இருக்கட்டும். ஒரு சகஜமான குடும்பத்தில் பெண்களால் அதிகம் கலவரமும் வருகிறதே...

ஒரு ஆண் எத்தனை சம்பாதித்தாலும் (மீண்டும் சொல்கிறேன் சகஜமான குடும்பங்களில்!) அவன் சொல்லிக் காட்டுவதில்லை. ஆனால் வியாபாரத்திற்காகவோ, குடும்ப முன்னேற்றத்திற்காகவோ தனக்குத் தாய் வீட்டில் போட்ட நகைகளையோ, கொடுத்த நிலத்தையோ விற்றால் 'சொல்லிக் காட்டாத' பெண்களை விரல் விட்டு எண்ணி விடலாம்.

'என் நகையையெல்லாம் இந்த ஆள் வித்துத் தின்னுப்புட்டானே!'

'அநியாயமா எங்கம்மா குடுத்த வீட்ட வித்துப்புட்டானே'

என்று 'குத்திக் குத்தி' தன் கணவனை புழுவாக ஆக்குகிறார்களே, அது ஏன்?

கணவன் அந்த வீட்டிற்கு உழைத்தால் அது அவன் கடமை. ஆனால் மனைவி தான் வந்து குடும்பம் நடத்தி, பெற்ற குழந்தைகளுக்காகக் கொடுப்பதும் கடமையாகவே நினைப்பதில்லையே!

அதிகம் சீர்வரிசை கொண்டு வந்து, நொடித்துப் போன அல்லது சுமாரான குடும்பங்களில் இது போல் கணவனை கொடுமைப் படுத்துவது மிக அதிகம். பெற்ற குழந்தைகள் கூட காலப்போக்கில் தந்தையை மதிப்பதில்லையே....

பெண்களுக்கு இப்படியும் ஒரு முகம் இருக்கிறதே, ஏன்?

**சந்தேகம் நெ. 3...**

பெண்களுக்கு அரசியலில் அதிகம் ஆர்வம் இருப்பதில்லை என்ற நிலை தமிழ்நாட்டில் தூக்கியெறியப்பட்டு விட்டது. இன்றைக்கு இரண்டு பெண்களின் தீவிரமான அரசியல் ஈடுபட்டால் தமிழகத்தின் தலையெழுத்தே மாறிக் கொண்டு இருக்கிறது. மற்ற விஷயங்கள் ஆயிரம் இருப்பினும் பெண்கள் இந்த விஷயத்தில் சந்தோஷம் கொள்ள வேண்டியதுதான்.

ஆனால் பெண்கள் என்ற ஒரே காரணத்தாலேயே அவர்களை படித்தவர்கள் கூட தனிப்பட்ட முறையில் தாக்கிப் பேசுவது ஏனென்று தெரியவில்லை.

மறைந்தவரின் இறுதி ஊர்வலத்தில் பெண் என்ற ஒரே காரணத்தால் எத்தனை கேவலம்? பெரிய போலீஸ் அதிகாரிகள், மத்திய அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள் இருக்கும்போதே ஒரு பெண் எம்.பி.யை இழுத்து அடிக்கிறார்களே, சாதாரண பெண்ணுக்கு இந்த நாட்டில் என்ன பாதுகாப்பு கிடைக்கும்? இதுவே ஒரு ஆணாக அந்த இடத்தில் இருந்திருந்தால் எத்தனை களேபரங்கள் நடந்து அந்த இடமே அசிங்கமாகி விட்டிருக்குமே!

அதே போலத்தான் பெண் ஒருவர் முதல்வராகி விட்டார் என்பதால் அவரையும், அவருடைய ஆலோசகர்களையும் அத்தனை குறைவாகப் பேசுகிறார்களே...

அரசியலில் இதெல்லாம் சகஜம் தான். ஆனால் பண்பாடு உள்ளவர்கள் கூட 'சமையலறை மந்திரிசபை' எனக் குறிப்பிடும்போது கஷ்டமாகத்தான் இருக்கிறது.

பிரதம மந்திரிக்கு ஆலோசகர்கள் இருந்தால் அவர்களைப் பள்ளித் தோழர்கள் என மரியாதைப் படுத்துகிறார்கள். ஆனால் இங்கு முதலமைச்சருக்கு ஆலோசகர்கள் பெண்கள் என்ற ஒரே காரணத்தால் அவர்களை 'ஊறுகாய் போடத்தான் தெரிந்தவர்கள்' என்பது ஏன்....

அவர்களுக்கு "சாமர்த்தியம் இருந்தால் நீடிக்கிறார்கள். அரசியலே சதுரங்க விளையாட்டாகிவிட்ட நேரம்தானே இது? இன்றைய நிலையில் அரசியலுக்கு வரும் பெண்களும் இன்றைய போக்கைக் கடைப்பிடிக்கத் தானே வேண்டியதாக இருக்கிறது?

சமையலறையைச் சொல்லி மட்டம் தட்டுவானேன்? அதற்காக சமையலறையை குறைவானது என்று நான் சொல்லவில்லை. ஒரு வித கேலியாக இதைக் குறிப்பிடும்போது தான் சந்தேகம் வருகிறது.

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு அன்றடம் தேவைப்படும் அத்யாவசிய ஊட்டச்சத்தை வழங்குகிறது.

சாதாரணமாக 15 அல்லது 16 வயது வரை, குழந்தைகளின் வளர்ச்சிக்கு புரதம், அடிப்படையான ஊட்டச்சத்தாகும். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால் புரதம் (20%) கொண்டது, காம்ப்ளான். மேலும் 22 ஆதார உணவுச் சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.

காம்ப்ளான் இனிய சுவைகளில் கிடைக்கிறது.




**23**
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

**காம்ப்ளான்®**
திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/38/203 T M L

* பத்மா





* பத்மாவதி

# மாணவர்களை எப்படி அணுகுகிறார்கள்?



* இந்திரா

அமெரிக்காவிலிருந்து வெளிவரும் பத்திரிகை ஒன்று மாணவர்களோடு பழகும் ஆசிரியைகளுக்குப் பலவித தொல்லைகள் ஏற்படுகின்றன என்று கூறுகிறது. மனநோய்க்குக் கூட பிற்காலத்தில் ஆசிரியர்கள் ஆளாகிறார்களாம். அதனால் அவர்களுக்குக் கட்டாயமாக வருடத்தில் இரண்டு மாதம் ஓய்வு இருக்க வேண்டும் என்றும் அந்த ஓய்வைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டு கல்விச் சாலை சிந்தனையேயில்லாமல் ஆசிரியர்கள் இருக்க வேண்டும் என்றும் கூறுகிறது. இது எவ்வளவு தூரம் உண்மை? நம் ஆசிரியைகள் மாணவர்களுடன் எப்படிப் பழகுகிறார்கள்? எப்படிச் சமாளிக்கிறார்கள் என்று மூவரை அணுகிக் கேட்ட போது —

டாக்டர் வெ. பத்மா (ஆய்வாளர், சென்னைப் பல்கலைக் கழகம்):

“மாணவர்கள் மாணவிகள் எல்லோருமே நல்லவர்கள் தான். சந்தர்ப்பம் சூழ்நிலை இவைகள் தான் அவர்களை மாற்றுகின்றன. அத்தகைய சந்தர்ப்ப சூழ்நிலைகளை மாணவர்களுக்குக் கொடுக்காமல் அதாவது அவர்களை ஆக்ரோஷப்படுத்தும் சந்தர்ப்பங்களை கொடுக்காமல் அவர்களுடன் ஒருவராக, நண்பராக நாம் பழகி விட்டால் ஆசிரியைகளுக்கு எந்த வித பிரச்சனையும் இருக்காது என்று நான் நினைக்கிறேன்.

மாணவர்களிடம் கடுகடுப்பாக நடந்து

கொள்வது தான் ஒரு ஆசிரியைக்கு அழகு என்று சிலர் நினைக்கிறார்கள். இதுதான் ஆசிரியைகளுக்கு ஒரு இமேஜ் கொடுக்கும் என்றும் சிலர் நினைக்கிறார்கள். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் இந்த இமேஜ் தேவையில்லாதது. அன்போடு பழகும் போது தான் நமது மீது ஒரு பிடிப்பு மாணவ மாணவிகளுக்கு ஏற்படும்."

**ஆர். பத்மாவதி (உயர்நிலைப் பள்ளி ஆசிரியை):**

"ஆசிரியைகள் மனநோய்க்கு ஆளாவார்கள் என்பதெல்லாம் உண்மையானதல்ல. மேலை நாடுகளில் அப்பா அம்மா குழந்தைகள் ஒன்றாக இருக்கக் கூடிய வாய்ப்பே குறைவு. அம்மா அப்பா பாசத்திற்காக ஏங்கும் குழந்தைகள்தான் அதிகம். அப்படிப்பட்ட குழந்தைகளால் மேல் நாட்டு ஆசிரியைகளுக்கு வேண்டுமானால் தொந்தரவுகள் இருக்கலாம். ஆனால் இந்தியாவில் பாரம்பரிய முறை கெட்டு விடாத காரணத்தால் நமக்கு அந்த சிரமங்கள் இல்லை.

உயர்நிலைப் பள்ளி மாணவ பருவம் என்பது அறிந்தும் அறியாத வயதுதான். வெளியுலகத்தை முழுமையாக அவர்களால் தெரிந்து கொள்ளவும் முடியாது. அதே சமயத்தில் தெரியவும் செய்யும். இப்படிப்பட்ட நிலையில் அப்படிப்பட்ட மாணவர்களுக்கு ஆசிரியைகள் வழிகாட்ட வேண்டும். அவர்களிடம் மிகவும் பக்குவமாக நடந்து கொள்ள வேண்டும்.

ஒரு மாணவன், ஒரு மாணவிக்கு ஏதாவது கடிதம் கொடுக்க வேண்டும் என்றாலோ அல்லது மாணவி மாணவனுக்குப் புத்தகம் கொடுக்க வேண்டும் என்றாலோ அது ஆசிரியையின் முன்னிலையில் தான் நடைபெற வேண்டும். அப்போதுதான் ஒரு பயம் இருக்கும்."

**திருமதி இந்திரா கிருபாநிதி (எல். கே. ஜி. ஆசிரியை):**

உயர்நிலைப் பள்ளி மாணவர்கள், கல்லூரி மாணவர்கள் இவர்களிடமிருந்து முற்றிலும் வித்தியாசமான மாணவிகள் இந்த சிறு பிள்ளைகள். எல்.கே.ஜி., யு.கே.ஜி. மாணவர்களுக்கு ஆசிரியைகளுக்குச் சிரமம் கொடுக்க வேண்டும் என்ற நோக்கம் எதுவும் இருக்காது. ஆனால் இவைகள் அறியாமையால் சிரமம் கொடுக்கும். ஒரு பெற்றோர்கள் எந்த விதத்தில் நடந்து கொள்வார்களோ அந்த விதத்தில் தான் இப் பிள்ளைகளிடம் ஆசிரியைகள் நடந்து கொள்ள வேண்டும். சில குழந்தைகள் அடம் பிடிக்கும், சில குழந்தைகள் சாப்பிடக் கூட மறுக்கும். அப்படிப்பட்ட குழந்தைகளை கதை சொல்லி, அன்பாக மாற்ற வேண்டும்.

இந்த வயது குழந்தைகளை எந்த காரணத்தைக் கொண்டும் மிரட்டக் கூடாது. பெற்ற தாய் போல் தான் எங்கள் பணி. சில சலிப்பு இருக்கலாம். ஆனால் அந்த சலிப்பு வெறுப்பாகவோ அல்லது எங்களை பாதிப்பதாகவோ இருக்காது!"

பேட்டி:

**சீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன்**

---



"நான் டில்லியிலே பிறந்து வளர்ந்தவள். அங்கு சிதார் கற்றுக் கொண்டேன். இந்துஸ்தானி சங்கீதத்தில் தேர்ச்சி பெற்ற நேரத்தில்தான் கல்யாணம் பண்ணிக்கிட்டு மெட்ராஸில் செட்டில் ஆகும் சூழ்நிலை ஏற்பட்டது. அப்புறம் குடும்பம், குழந்தைகள்னு வருடங்கள் ஓடிப் போயாச்சு.

ஆனாலும் என்னோட சங்கீதத்தை என்னால மறக்க முடியலே. தமிழ்நாட்டு ரசிகர்களில் அதிகம் பேர் இந்துஸ்தானியை ரசிக்கிறதில்லே. அப்பதான் எனக்கு அந்த 'ஐடியா' தோணித்து. ஏன், சிதார்ல கர்நாடக இசையை வாசிக்கக் கூடாதுன்னு? அப்படி ஆரம்பித்தது தான் இந்தக் கச்சேரிகள்."

என்று சிரிக்கிறார் திருமதி நளினி.

"புதுசா இப்போ திடீர்னு கர்நாடக இசை கத்துக்கிறது கஷ்டமா இல்லையா?"

"இல்லே. எல்லா சங்கீதத்திற்கும் அடிப்படை ஒண்ணு தானே? அம்மா டில்லியிலே புகழ்பெற்ற கர்நாடக இசைப் பாடகி. அம்மா கிட்ட ரொம்ப எளிதா கத்துக்கிட்டேன்."

"நீங்க இசைக் கச்சேரிகள் செய்யறதை உங்களுடைய புகுந்த வீட்டார் எப்படி வரவேற்கிறாங்க..."

"... என்னுடைய ஒவ்வொரு கச்சேரிக்கும் தம்பூரா வாசிக்கறது என்னுடைய மாமியார்தான்..." என்றபோது 'ஓ... கொடுத்து வைத்தவர்தான் நீங்க!' என்று பாராட்ட வேண்டும் போல இருந்தது.

— **பவித்ரா**

அட்டை வண்ணப்படம்: **யோகா**



# எனது ஆதர்ச கதாநாயகிகள்

எழும்பூர் சரளா ஆர்ட் சென்டரில் 'சுஜாதா ஓவியக் கண்காட்சி' என்றதும், பிரபல எழுத்தாளர் சுஜாதா எப்பொழுது ஓவியம் கற்றுக் கொண்டார் என்ற கேள்வியும், நடிகை சுஜாதாவுக்கு ஓவியம் கூடத் தெரியுமா என்ற ஐயமும்தான் எழுந்தது! பூனாவிலிருந்து வந்திருக்கும் மிஸ் சுஜாதா பஜாஜ் தமது ஆதிவாசிகள் ஓவியங்களை டாக்டர் எம். எஸ். அவர்கள் விளக்கேற்றி வைத்துத் தொடங்கி வைத்ததும்தான் விஷயம் புரிந்தது.



''பணக்காரக் குடும்பத்தில் ஜெய்பூர் நகரத்தில் பிறந்த உங்களுக்கு, காடும் மேடும் கடந்து, தொலைதூர ஆதிவாசிகளின் வாழ்வைச் சித்திரிக்க வேண்டும் என்ற ஆசை ஏன் எழுந்தது?'' என்று சுஜாதாவைக் கேட்ட போது —

''எனக்குக் குழந்தைப் பருவத்திலிருந்தே இயற்கை, கிராமம், ஆதிவாசிகளது எளிமையில் மோகம் அதிகம். எளிமையான அந்த மக்களின் கள்ளங்கபடமற்ற வாழ்வைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை எழுந்தது. என்னுடைய பி. எச்டி. ஆராய்ச்சிக்கும் அவர்களையே பொருளாகக் கொண்டேன்! பல காட்டு வழிகளில் தன்னந்தனியாகச் சென்று அவர்களது உண்மையான நிலவரத்தைக் கண்டறிந்திருக்கிறேன். முதலில் அவர்கள் என்னை நெருங்கவே பயப்பட்டார்கள்! ஓவியம் வரைய அனுமதிக்கவே இல்லை!

''பல படையெடுப்புக்களுக்குப் பிறகு ஒரு மொழி பெயர்ப்பாளரின் உதவியோடு எனது ஓவிய ஆசையை விவரித்துச் சம்மதம் பெறுவதற்குப் பகீரதப் பிரயத்தனம் செய்





தேன். கடைசியில் அவர்கள் அரை மனத்தோடுதான் முன் வந்தார்கள். ஒரு மாதத்தில் இருபது நாட்கள் ஆதிவாசிகளின் குடும்பங்களோடு உறவாடிக் களித்து, பாக்கி பத்து நாட்களில் பூனாவுக்கு வந்து 'டாக்டர்' ஆராய்ச்சிக்கான பணிகளில் ஈடுபடுவேன்' நான்கு வருஷ என் இடைவிடாத பயணத்தில் ராஜஸ்தான் பில்கள், மகாராஷ்டிரம் வார்லிஸ், மத்தியப் பிரதேசம் மடியா, மூரியர்கள் எனது ஜீவனுள்ள படைப்புக்களின் ஆதர்சக் கதாநாயகர்கள், கதாநாயகிகள் ஆனார்கள்!'' என்று தனது அனுபவங்களைச் சுவையாகக் கூறினார் குமாரி சுஜாதா.

''ஆதிவாசிகளை எல்லாம் சாதாரணமாகக் கொஞ்சம் பயங்கரவாதிகளாகவே சொல்வார்களே?''

''நிச்சயமாக இல்லை. நான் பல இடங்களுக்குத் தனியாகச் சென்றிருக்கிறேன். முதல் முறை செல்லும் போது மட்டும் எனது மூத்த சகோதரர் உடன் வந்தார்! எனக்கு ஒரு பிரச்னையும் வந்ததில்லை. பஸ்டாரில் அங்குள்ள ஆதிவாசிகளின் கல்லறைகளுக்குச் சென்ற போது மட்டும் பலர் என்னைப் பயமுறுத்தினார்கள். கல்லறைகளில் பயங்கரக் காற்று, துர்த் தேவதைகள் வாசம் செய்யும். உனக்கு ஆபத்து வரும்' என்றனர்! எனக்கு அங்கே போனதில் பல விசித்திர அனுபவங்கள்! என் உயிருள்ள சித்திரங்களுக்கு இப்படிப் பல விநோதப் பயணங்கள் 'உதவியுள்ளன!''

சுஜாதாவின் ஆதிவாசிகள் கலைப் படைப்புக்களை, அவரது சித்திரக் கண்காட்சியில் பார்க்கும் போது அவரது அயராத உழைப்பு, வீண் போகவில்லை என்பது தெரிகிறது. கான்வாஸ் வண்ண ஓவியங்கள் உணர்ச்சிகளின் வெளிப்பாடாக ஆதிவாசிகளின் வாழ்வைச் சுவைபடப் படம்பிடித்துக்காட்டுகின்றன.

*1978* — ஆம் வருஷத்திலிருந்து சுஜாதாவின் ஓவியக் கண்காட்சிகள் இந்தியாவின் பல நகரங்களில் நடைபெற்றுள்ளன. இவரது திறமையை மெச்சிப் பல பாராட்டுக்கள் வந்துள்ளதில் இங்கிலாந்து கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் அளித்த 'சர்வதேச இளமையின் சாதனை' விருது முக்கியமானது. இவரது வண்ண ஓவியங்களை பிலிப்ஸ் நிறுவனம் 'காலண்டரா'கத் தேர்ந்தெடுத்து வெளியிட்டுள்ளது. வெளிநாடுகளுக்கு இவரது வண்ணச் சித்திரங்கள் பல பயணமாகியுள்ளன.

சுஜாதாவுக்கு அவரது கல்லூரி சிநேகிதி பட்டுப் புடைவை பரிசளிக்க முன்வந்த போது, ''எனது சித்திரங்களிலிருந்து கிடைக்கும் தொகையிலிருந்து புடைவை வாங்குவதையே நான் விரும்புகிறேன்!'' என்று பளிச் சென்று கூறியது அவரது உழைப்பில் அவர் கொண்டிருக்கும் ஆழ்ந்த ஆர்வத்தையே காட்டியது!

— பி. எஸ். எம்.

---

ஆசிரியரான நான் சைக்கிளில் சாப்பாடு கேரியரை கட்டிக் கொண்டு சென்றேன். பள்ளி வந்தவுடன் ஒரு பையனை கூப்பிட்டு கேரியரை கழட்டி ரேக்கில் வைக்கும்படி கூறினேன். அவன் சிறிது நேரம் கழித்து என்னிடம் வந்து "சைக்கிள் கேரியரில் ஒரு நட் வரவில்லை. அதை வெட்டினால்தான் கேரியர் தனியாக வரும் என சைக்கிள் கடைக்காரர் கூறிவிட்டார்' என்றான். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''சைக்கிள் கேரியரை கழட்ட வேண்டாம் சாப்பாட்டுக் கேரியரை அல்லவா கழற்றி வைக்க சொன்னேன்'' என்று பதறியவுடன் ஆசிரியர்கள் எல்லாம் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

— பி. என். அண்ணல்.



# மாசியின் மகத்துவம்

கதை: சுபயோகம் விவேகா

படம்: கோபதி

திலீபன் என்னும் பேரரசன் காட்டுக்குச் சென்று கொடிய மிருகங்களை வேட்டையாடினான். அங்கிருந்து அவன் தன்னுடைய வீரர்களுடன் புறப்பட்ட போது...




விருத்த ஹாரிதர் என்னும் முனிவரின் இவ்வேண்டுகோள் அரசனுக்குப் புதிராக இருந்தது.




அவ்வாறே மாசி பிறந்ததும் நதியிலே நீராடி அரண்மனைக்குத் திரும்பிய திலீபன், தமது குல குருவான வசிஷ்டரிடம் அது பற்றிக் கேட்க...




வசிஷ்டர் விவரித்தார்.

யமுனை நதிக் கரையிலுள்ளது மதுவனம் எனும் கானகம். அங்கு வத்சன் என்னும் முனி குமாரன் மாசி மாதத்தின் புலர் காலைப் பொழுதுகளில் மகா விஷ்ணுவைத் துதித்தபடி தொடர்ந்து நீராடி வந்தான்...



தன்னை மறந்து தவத்தில் ஆழ்ந்த சமயங்களில் காட்டு மிருகங்கள் அவனருகில் சென்றன. அவனை உரசின; உடல் மேல் சாய்ந்தன; முட்டிப் பார்த்தன. சில, கொம்பும் நீட்டின.



யாதொன்றுக்கும் சலனப்படாத உடலும் மனமும் கொண்ட அந்த முனி குமாரன் 'மிருக சிருங்கர்' என அழைக்கப்படலானான். தவ வலிமையாலும் சிறந்தவரானான்...

முன் ஒரு சமயம்—மிருக சிருங்கர் கானகத்தின் எல்லைக்கருகில் வந்தபோது ஒரு சோகக் கதறல் அவரை உலுக்கியது...




கிணற்றில் விழ இருந்த பெண்மணியைத் தடுத்து நிறுத்தினார்...




கழுத்தளவு நீரில் நின்றுகொண்டு கடுந்தவம் இயற்றினார் மிருக சிருங்கர். அப்போது வானில் ஓர் இடிக் குரல்...!




மரண தேவனான எமதர்ம ராஜன் காட்சி தந்தார்.




வத்சா! அவரவர் கர்மாவின்படியே அவரவர் வாழ்வும்! கொடிய கர்மாக்களைச் செய்தவர்களுக்குத்தான் அகால மரணம்!
அப்படியானால்..


இந்தப் பெண்களைச் சார்ந்திருக்கும் பாபத்தை என்னுடைய புண்ணியத்தால் அகற்றுகிறேன். நான் மாசி மாதந் நாளில் தூய நீராடி, மாசி மகம் அன்று மகா ஸ்நானமும் செய்ததால் உண்டான புண்ணியங்கள் அனைத்தையும் இந்த மாதாசியின் பெண்களுக்கே அர்ப்பணிக்கிறேன். இவர்களுக்கு உயிர் தாருங்கள்!
நினைத்ததைச் சாதித்துக் கொண்டாய். உன் விருப்பப் படியே அருள்கிறேன்!


உறக்கத்திலிருந்து விழித்ததைப் போல, மூன்று பெண்களும் உயிர் பெற்று எழுந்தனர்.
முனிவர் பெருமானே! என் பெண்களுக்கு உயிர் கொடுத்த தாங்களை என்றும் மறவோம்!
உயிர் தந்தது நானல்ல! மாசிமக ஸ்நானத்தின் புண்ணியமே!
மாசிக்கு, மேலும் ஒரு மகத்துவம் உண்டு.


உயிர்கள் பிறப்பதும் இறப்பதும் போல், உலகம் தோன்றுவதும் அழிவதும் உலக நாயகனான அந்த பெருமானின் திருவிளையாடல்! அப்படித்தானே ஒரு கற்பக் காலத்தின் முடிவில்...


பிரளய வெள்ளத்தால் உலகமே மூழ்கடிக்கப் பட்டது!
நிலம், நீர் நிலைகள், மலைகள், ஜீவராசிகள் முதலான அனைத்துமே பிரபஞ்சப் பேரிருளில் புதைந்து போயின!

அன்னை பராசக்தியின்
தாயுள்ளம் பதறியது...




ஒரு மாசி மாதத்தில் அமாவாசை தினத்திற்கு முதல் நாள் - அன்று உபவாசமிருந்து இரவுப்பொழுதின் நான்கு ஜாமங்களிலும் சிவபெருமானைப் பூஜித்து —




உலகம் உயிர்பெற வேண்டினார் பார்வதி தேவி.

அதிகாலையில் இறைவன் திருவுளங் கொண்டு அதுவரை ஜல சமாதியிலிருந்த உலகத்தை ஜீவ பூமியாக்கினார். ஊழி வெள்ளம் வடிந்தது. பூமி புலப்பட்டது. கதிரொளி தழுவியது. உயிர்கள் தோன்றின. உலக இயக்கங்கள் அனைத்தும் தொடர்ந்து நடைபெறத் தொடங்கின!





பரமசிவனை வேண்டிப் பார்வதிதேவி துதித்த அந்த மாசி மாதத்துத் தேய்பிறை சதுர்த்தசி தினத்தின் இரவுதான் 'சிவராத்திரி' என வழங்கலாயிற்று. ஒவ்வோர் ஆண்டும் அந்நாளில் உபவாசமிருந்தும், இரவு முழுதும் கண் விழித்தும், சிவ புராணம், தேவாரம், திருவாசகம் முதலான பக்தி நூல்களைப் பாராயணம் செய்தும் சிவ பூஜை செய்தால், மனமும் உடலும் புத்தொளி பெறும்; செயல் சக்தி பெருகும்; வாழ்க்கையில் வளம் உயரும்.

காது கேட்கும் திறன் இழந்தவரின் குறை பெரிதாயினும், முதலில் பரிதாபத்தைப் பெறுபவர்கள் கண் பார்வை இழந்தவரே என்கிறார் பார்வையற்றோருக்கான தூய லூயிஸ் பள்ளியில் பத்தொன்பது வருடங்களாகப் பணிபுரியும் அருண்மொழி தேவன். சென்னைப் பல்கலைக் கழக முதுகலைப் பட்டமும், இப்பிரத்தியேக ஆசிரியப் பணிக்குரிய "சீனியர் டிப்ளமா டிரெயினிங் ஃபார் பிளைண்ட்" மற்றும் தமிழ்ப் புலவர் பட்டமும் பெற்றவர்.

# நான் ஏன் இந்த மாணவர்களுக்கு ஆசிரியரானேன்?



"நான் ஏற்கனவே சாதாரண பள்ளியில் ஒரு ஆசிரியராக இருந்தவன். ஒரு சந்தர்ப்பத்தில் பூந்தமல்லியில் உள்ள டிரெயினிங் ஸ்கூல் போக வேண்டி இருந்தது. அப்போது அங்கு பார்வையற்ற மாணவர்களை வைத்து பாடம் நடத்தியதைப் பார்த்தேன். 'நாம் ஏன் இந்த மாணவர்களுக்கு ஆசிரியராகக் கூடாது' என்று தோன்றியது. அதற்குத் தேவையானவரை அணுகிய போது அவர், 'உங்களுக்கு ஒத்து வராது இத்தொழில் என்றார். அதையே ஒரு சவாலாக வைத்துக் கொண்டேன். இப்பள்ளி விளம்பரமும் வந்தது. விண்ணப்பித்த ஒரு வாரத்திலேயே அழைப்பு வந்து சேர்ந்தேன். எனது தந்தையார் ஒரு சமூக சேவகர். எனவே இயல்பாகவே அந்த எண்ணம் என்னுள் வேரூன்றி இருக்கிறது" என்கிறார்.

**"மாணவர்களிடம் உங்களுடைய அனுபவம் எப்படி?"**

"படிப்பின் மூலம் அவர்களுக்கு இன்றைக்கு வேண்டிய அறிவு கொடுக்கிறோம். ஆனாலும் இவர்களுடைய தாழ்வு மனப்பான்மையை திறமையை வளர்ப்பதின் மூலம்தான் குறைக்க முடியும். 'மேனரிஸம்' போல் சாதாரணமாய் சும்மாவே தலையாட்டிக் கொண்டிருத்தல், சந்தோஷம் வந்த போது நெஞ்சில் இரு கைகளால் படபடவென அடித்தல் போன்ற பல பழக்கங்களை எடுத்துச் சொல்லி அதைத் திருத்தி இயல்பாக அவர்களை நடந்து கொள்ள சொல்ல வேண்டும். இவர்களைவிட இந்தச் சமூகம் திருந்த வேண்டியது நிறைய இருக்கிறது. ஊனமுற்றவர்களை கேலிபேசும் கொடுமை ஒழிய வேண்டும்" என்கிறார். இவர்களை குருடர், விழி இழந்தோர், செவிடன், ஊமையன் என்றே சொல்வதை விட பார்வையற்றவன், குறைபார்வையுடையோர், காது கேளாதோர், செவித் திறன் குறைந்தோர் பேச்சுத் திறன் குறைந்தோர் என்று நாம் கூறக் கற்றுக் கொள்ள வேண்டும்.



"பொதுவாகப் பார்வை இழப்புதான் உலகிலே, மனித உடல் இயக்கத்திலே பெருங்குறை என்கிறோம். ஆனால் செவித் திறன் குறைந்தோருக்கு ஆசிரியையாகப் பணிபுரியும் திருமதி எஸ். அனந்தலக்ஷ்மி பார்வை இழந்தவரின் குறையை விட காது கேளாதவரின் குறைதான் பெருங்குறை" என்கிறார் —

"எனது மூத்த சகோதரி விட்டில் ப்ளவர் பள்ளியில் பணிபுரிகிறார். எனவே எனக்கும் இயல்பாக அவரைப் போல ஊனமுற்றோருக்குப் பணிபுரிய வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. நான் பள்ளி இறுதி வகுப்பு முடித்ததும் இப்பள்ளியில் பணிபுரிய வாய்ப்புக் கிடைத்ததை விரும்பி ஏற்றுக் கொண்டேன்."

**இப்பள்ளியில் பணிபுரியப் பிரத்தியேகப் பயிற்சி உள்ளதா?**

"நிச்சயமாக. வழக்கமான ஆசிரியர் பயிற்சிக்குப்பிறகு ஜூனியர் டிப்ளமோ என்று ஒவ்வொரு வருடப் பயிற்சி உள்ளது. இந்தப் பயிற்சி பெறுவதால்தான் மாணவர்களின் மனோநிலையைப் புரிந்து கொள்ள முடியும்."

மற்ற சாதாரண பள்ளி ஆசிரியர்களைவிட இப்பணியில் சேர சேவை மனப்பான்மை தேவை. ஆனால் அதைவிட மிகவும் பொறுமையும், நிதானமும் அவசியம்.

இந்த மாதிரிக் குழந்தைகளுடன் பழகிவிட்டால் நமக்கு வெளியே வேறு வேலை தேடிப் போகும் எண்ணமே வராது. முதுநிலைபடிப்பு முடித்து, நல்ல வாய்ப்பு கிடைத்தாலும் இதை விட்டு போவதான எண்ணமும் இல்லை.

எங்களுடைய பள்ளி மாணவர்களில் பலர் பாங்க் ஆபீஸராக இருக்கிறார்கள். இராமலிங்கம் என்பவர் ஓவியக் கண்காட்சியெல்லாம் நடத்தினார். பலர் விளையாட்டு வீரர்களாக இருக்கிறார்கள். இவர்களையெல்லாம் நினைக்கும்போது 'வாழ்க்கையின் வெற்றி என்பது உடம்பில் இல்லை, மனத்தில் இருக்கிறது' என்று பெருமைப்படுவேன்" என்கிறார்.

— பேட்டி: **மங்களம்**



# சிறந்த சாரணியர்



"ஒரே பள்ளியில் பத்து மாணவிகள் 1987 ஆம் வருட குடியரசுத் தலைவரின் சிறந்த சாரணியர் விருதைப் பெற்றிருக்கிறார்கள்! இவர்கள் தீவிரப் பயிற்சியையும், ஒழுக்கத்தையும் கடைப்பிடித்ததால் இப்பரிசு கிடைத்தது. இதற்குப் பின்னணியில் இருந்தவர் தலைமையாசிரியையும், மாவட்ட சாரண ஆணையருமான எல். தேவசிங்காரம்தான். கே. எஸ். உஜ்ஜிவனம், அன்புக்கனியும் இவர்களும் மாணவிகள் பரிசு பெறக் காரணமாக இருந்திருக்கிறார்கள். அருப்புக்கோட்டை சைவ பானு க்ஷத்திரிய மேல்நிலைப்பள்ளி மாணவிகள்தான் இச்சிறப்புக்கு உரியவர்கள்.

மாணவிகள் பெயர்கள், 1. எஸ். பமீலா, 2. சி. ஜெயந்தி, 3. எம். நிலோபர்னிஸா, 4. டபிள்யூ ஜெனட், 5. ம. தாமரைச் செல்வி, 6. எஸ். எச். ஆமீனுபானு, 7. ஜெ. சுகந்தி, 8. ஜெ. சலோமி அன்புச் செல்வி, 9. எஸ். ஹெலன் ஜீவஜோதி, 10. ஏ. சவிதா."

படமும் தகவலும்: மதுரை ராஜசேகரன்.

நான்
புதிய காமதேனு
கூட்டுறவுச் சிறப்பங்காடியிலேயே
எல்லாப் பொருட்களையும்
வாங்குகிறேன். ஏன் தெரியுமா?

ஒன்றா...இரண்டா!
11 காரணங்கள் உண்டு!

1. தரமான பொருட்கள் கிடைக்கும்.
2. பொருட்கள் ஒழுங்காகவும் கவர்ச்சியாகவும் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. பொருட்களை எளிதில் தேர்ந்தெடுக்கலாம்.
3. பொருட்கள் சரியான எடை, அளவில் உள்ளன. பணத்துக்கேற்ற பொருள் கிடைக்கும்.
4. நியாயமான விலை—பேரத்திற்கு இடமே இல்லை.
5. விரைவில் நவீன முறையில் பட்டியல் தயாரிக்கும் கருவிகள் உண்டு.
6. எப்போதும் தேவையான பொருட்கள் தயாராக இருப்பில் உண்டு.
7. புதிய காய் கனிகளும் கிடைக்கும்.
8. வாகனங்களை வசதியாக நிறுத்தலாம்.
9. சுவையான தின்பண்டங்கள் ஏராளம்.
10. காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி—ஆதரிக்க வேண்டியது; இது ஒருவருக்கொருவர் நன்மையடையும் முயற்சியும் கூட
11. *நிரந்தர வைப்பு 6 மாதத்திற்கு மேல் 12% மாதாந்திர வட்டி வழங்கப் படுகிறது.*

# புதிய காமதேனு
## கூட்டுறவுச் சிறப்பங்காடி

தேனாம்பேட்டை சென்னை-18. ஞாயிற்றுக்கிழமை விடுமுறை

கிளைகள்: பெஸன்ட் நகர், அசோக்நகர், பழைய காமதேனு, திருவல்லிக்கேணி.

— காலை 9 மணி முதல் இரவு 8 மணி வரை இயங்கும்.

விடுமுறை
வெள்ளிக்கிழமை



# போனில் வந்த செய்தி!

'வளரும் சமூகத்திற்கே வழிகாட்டுபவர்கள்' என்ற பெருமையும், பொறுப்பும் இருப்பதால்தான் ஆசிரியர்களுக்கு அரசாங்கம் நல்லாசிரியர் விருது கொடுத்துக் கௌரவிக்கிறது. பல பெண்மணிகள் தங்களுடைய தன்னலம் கருதாத சேவையினால் இப்பெருமையை மாநில அளவிலும், மத்திய அளவிலும் பெற்றிருக்கிறார்கள். அப்படி மத்திய அரசாங்கத்தின் விருது பெற்றவர் திருமதி பாக்கியலக்ஷ்மி —

"வீட்டிற்கு முதல் பெண். ஒன்பதாம் வகுப்பு படித்தாயிற்று. இனி திருமணம்தான் என்று என் தாய் தந்தையர் 1943 இல் எனக்குத் திருமணம் செய்து விட்டார்கள். கணவர் மிலிடரியில் இருந்ததால் மூன்று வருடங்கள் கான்பூரில் குடித்தனம். பின்பு, சென்னைக்கு மாற்றலாகி வந்தோம்.

நான்கு வருடங்களுக்குள் மூன்று பெண் குழந்தைகள். வீட்டு சூழ்நிலை காரணமாக வேலைக்குப் போக வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. முதல் பெண் இரண்டாவது படிக்க, இரண்டாவது பெண்ணை என் சகோதரி திருச்சிக்கு அழைத்துக் கொண்டு சென்று விட்டாள். மூன்றாவது பெண்ணை இரண்டு தெரு தள்ளி இருந்த என் அத்தை வீட்டில் விட்டு (அது தினமும் ரோடிலேயே உட்கார்ந்துகொண்டுநானும்கூட வருகிறேன் என்று அழும்.) மாட்லி ரோட்டில் உள்ள சிஸ்டர் சுப்பலக்ஷ்மி அம்மாள் நடத்திய பள்ளியில் மெட்ரிகுலேஷன் பள்ளியில் மெட்ரிகுலேஷன் படித்து முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றேன். பர்கிட் ரோடில் உள்ள சாரதா வித்யாலயாவில் ஆசிரியை பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தேன்.

என் கணவருக்கு ஆவடியில் வேலை. வீடு மாம்பலத்தில். காலை நான்கு மணிக்கு எழுந்திருந்து அவருக்குக் காலை உணவும், மதிய உணவும் செய்து கொடுத்து அவரை ஆறு மணிக்கு அனுப்பிவிடுவேன். பின்பு குழந்தைகளை எழுப்பி, குளிக்கச் செய்து, சாப்பிட வைத்து, பள்ளிக்கு அனுப்பிவிட்டு நானும் பள்ளிக்குக்கிளம்பி விடுவேன். மாலையில் என் கணவர் சீக்கிரம் வந்து விடுவார். கறிகாய், சாமான் வாங்கி வந்து, இரவு உணவு தயாரித்து, குழந்தைகளைப் படிக்க வைத்து, எனக்கு பயிற்சிப் பள்ளிக்கு வேண்டிய மாடல்கள் தயார் செய்து கொடுத்து எல்லாம் செய்வார். அவர் உற்சாகமும், உதவியும் இல்லாவிடில் நான் எங்கேயோ இன்று இருந்திருப்பேன்.

1957 இல் ஆசிரியைப் பயிற்சி முடிந்து ரோசரி மெட்ரிகுலேஷன் பள்ளியில் அந்த வருடமே ஆசிரியை ஆகப் பணியில் சேர்ந்தேன். நான்கு தலைமை ஆசிரியை கீழ் தொடர்ந்து ஒரே பள்ளியில் 1988 வரை முப்பது வருடம் வேலை செய்துள்ளேன். ஹிந்தி படித்து ஹிந்தி ஆசிரியை ஆகப் பணி புரிந்தேன்.

ஒரு பெண்ணுக்கு ஜுரமா? கீழே விழுந்து அடிபட்டு விட்டதா, எலும்பு முறிந்து விட்டதா, அக்குழந்தையை எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு ஓடி, வீட்டில் தகவல் கூறி, பெற்றோரிடம் ஒப்படைக்கும் வரை என் பொறுப்பில் விட்டு விடுவார் என் தலைமை ஆசிரியை.

இரட்டையரில் ஒருத்தி, பத்தாவது படிக்கும் மாணவி, இரண்டாம் மாடியில்



இருந்து விழுந்து, பல எலும்புகள் உடைந்து, மடியில் போட்டுக் கொண்டு ஓடி, ஆஸ்பத்திரியில் என் புடைவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு "மிஸ், என்னை விட்டுவிட்டுப் போய் விடாதீர்கள்" என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே என் கண் எதிரிலேயே உயிர் நீத்தது என் கண் முன்னம் இன்னும் நிற்கிறது.

பள்ளிக்கு வெளிப் பள்ளியிலிருந்து யார் வந்தாலும் உபசரிக்க, எந்த வகுப்பு ஆனாலும் அவர்களுடன் உல்லாசப் பயணம் செல்ல, பள்ளியில் கண்காட்சி ஏற்பாடு செய்ய, மைக் போட, பள்ளிக்கு நோட்டுப் புத்தகங்கள் வாங்க, பரிசுப் பொருள்கள் வாங்க என்றும் எப்போதும் பாக்கியலக்ஷ்மி எங்கே என்று கேட்குமளவு பள்ளியில் நற்பெயர் எடுத்துள்ளேன்.

உறவினர் சிலர் டில்லியிலிருந்து வந்திருந்தனர். அவர்கள் காஞ்சிபுரம் போக வேண்டும் என்றதால் காலையில் கிளம்பி காஞ்சிபுரம் சென்றோம். தவத்திரு காஞ்சிப் பெரியவர்களை நமஸ்கரித்துக் கொண்டு இருக்கும் போது சென்னையிலிருந்து போன் என்றதும் பயந்து விட்டேன். என் பெண், "அம்மா! உனக்கு 'நேஷனல் அவார்டு' கிடைத்துள்ளது. இன்று சென்னையில் வள்ளுவர் கோட்டத்தில் தமிழ்நாடு அரசாங்கம் உன்னைக் கௌரவிக்கிறது. நீ உடனே கிளம்பி வா" என்றாள். நான் மேலே பறப்பது போல் இருந்தது. தொடர்ந்து நான்கு நாட்கள் நான் என்ன செய்கிறேன் என்று எனக்கே தெரியவில்லை.

கடவுள் ஒருவரின் சிபாரிசினால் கிடைத்த இந்தப் பெருமை, பிரதியுபகாரம் எதிர்பாராமல் செய்தால் கிடைக்கும் என்பதை அன்று புரிந்து கொண்டேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக ஐ. ஏ. எஸ். ஆபீசர்களாகவும், எஞ்சினியர்களாகவும், டாக்டர்களாகவும், குடும்பப் பெண்களாகவும் உள்ள பல பெண்கள் "மிஸ் எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்கும் போது வேறு எந்தத் துறையில் வேலை செய்தாலும் இந்த உபசரிப்புக் கிடைக்குமா என்பது சந்தேகம்தான்.

1987, செப்டம்பர் 5ந்தேதி மாலை 5 மணிக்கு நம் ஜனாதிபதி ஆர். வெங்கடராமன் அவர்களிடம் பரிசுபெற்ற போது எனக்கு இந்தத் தகுதி கிடைக்க வீட்டில் உற்சாகமூட்டியும், உதவிகள் செய்தும் பேரன்பு காட்டிய என் கணவரையும், என் என்னும் முன்னால் எண்ணெய் ஆகி நின்று கொள்ளும் என் மூன்று பெண்களையும், என் சக ஆசிரியைகளையும், என் தலைமை ஆசிரியையையும் மனத்தில் இருத்திப் பரிசு பெற்றுக் கொண்டேன்."

— பவித்ரா

## சந்திர உடம்பு!

ஒரு சில பெண்களின் உடம்பு மேலே தவறிப் பட்டுவிட்டால் சூரியனே அருகில் வந்த மாதிரி சுடும். மாசிக் காயைப் பொடித்து தேனிலாவது, வெந்நீரிலாவது கலந்து ஒரு நாளைக்கு மூன்று தரம் சாப்பிட்டால் சந்திர உடம்பாக (குளிர்ச்சியாக) மாறிவிடும். மாசிக்காயின் குணம் அப்படி.

— சித்ரா.

## குழந்தைக்குப் புதுமையான ஷாம்பூ!

அடிக்கடி ஜலதோஷம் பிடிக்கும், மற்றும் சைனஸ் தொல்லை உள்ள குழந்தைகளுக்கு, எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்ட சில தாய்மார்கள் பயந்து கொண்டு, ஷாம்பூ, சோப்புப் போட்டுக் குளிப்பாட்டுவார்கள். அடிக்கடி ஷாம்பூ போடுவது நல்லதல்ல என்பதை அனைவரும் அறிவர். அரை கிலோ பச்சைப் பயிறுடன் ஒரு டேபிள் ஸ்பூன் வெந்தயம் கலந்து மிஷினில் அரைத்து வைத்துக் கொள்ளலாம். குளிப்பதற்கு அரை மணி நேரம் முன்பு வேண்டிய அளவு எடுத்து வெந்நீரில் குழைத்தால் வெந்தயம் இருப்பதால் நுரைத்து வரும். எண்ணெய் தேய்க்காமலே இதைத் தலையில் தேய்த்துக் குளிப்பாட்டலாம். அழுக்கு, பிசுக்கு இவை போய்விடும். வெந்தயம் தலைமுடியை மிருதுவாகவும், ஷாம்பூ போட்டது போல் பளபளப்பாகவும் ஆக்கும்.



— சாந்தா.

# ஏன்?



ஏனெனில் திருமதி ஐயங்கார் அன்று இரவு படுக்கைக்குப் போகுமுன். மிகவும் அசதியாய் இருந்ததால். காஸ் ரெகுலேட்டரை மூட மறந்து விட்டார். துரதிருஷ்டவசமாய். ஸ்டவ்வின் ஒரு பர்னரை சரியாக மூடாமல் இருந்ததால். அதன் வழியாக காஸ் கசியத் தொடங்கியுள்ளது.

அடுத்த நாள் அதிகாலையில் காபி போடுவதற்காக சமையலறைக்குச் சென்றார். அவர் காஸ் வாடையை நுகர்ந்தார். ஆனால் அவர் தூக்கக் கலக்கத்தில் அந்த அபாயமான அறிகுறியின் மேல் கவனம் செலுத்தவில்லை. தீக்குச்சியை பற்ற வைத்தார்...

அவ்வளவுதான்...திருமதி ஐயங்கார் சிறிது காயங்களுடன். பெரிய விபத்துக்கு உள்ளாகாமல் தப்பிப் பிழைத்தார். ஆனால் நீங்களும் அவரைப் போன்று அதிர்ஷ்டசாலியாக இருப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்...

# எப்படி?

**இதுபோன்ற சூழ்நிலை உங்களுக்கு நிகழாதிருக்கும்படி எச்சரிக்கையாய் இருங்கள்.**



எப்போதும் இரவில் ரெகுலேட்டரை மூட மறவாதீர்கள்.

**இண்டேனின் இரண்டு நிமிட LPG (எல்பிஜி) பாதுகாப்பு முறையைப் பின்பற்றுங்கள்:**

**அதிகாலையில் சமையலறைக்குள் போன முதல் நிமிடம்,** காஸ் வாடை அடிக்கிறதா என்று பாருங்கள். அப்படி காஸ் வாடை இருந்தால், கீழே கொடுக்கப்பட்டுள்ள முன்னெச்சரிக்கைகளைப் பின்பற்றவும். காஸ் வாடை இல்லையெனில் நீங்கள் ரெகுலேட்டரை திருப்பலாம். அவ்வாறு திறக்கும்போது ரப்பர் ட்யூபில் எவ்வித வெடிப்பும் இல்லாது இருக்கிறதா என்று கவனிக்கவும்.

பர்னரை திறக்கும் முன் தீக்குச்சியைப் பற்றவைத்துப் பார்க்கவும்.

**இரவில் கடைசியாக சமையலறை லைட்டை அணைத்துவிட்டு வரும் முன்,** ரெகுலேட்டரை மூடவும், பிறகு பர்னர்கள் முழுமையாக மூடி இருக்கின்றனவா என்று உறுதி செய்து கொள்ளவும்.

**காஸ் வாடை வந்தால் உடனடியாக செய்ய வேண்டியவை.**

- ரெகுலேட்டர் மற்றும் பர்னர்களை மூடவும்.
- எல்லா திறந்த சுடர்களையும் அணைத்து விடவும்—ஊதுவத்தியைக் கூட.
- காஸ் வெளியேறும் வகையில் ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துவிடவும்.
- லைட்/ஃபான் போன்றவற்றை போடவோ அணைக்கவோ கூடாது. அதனால் ஏற்படும் ஒரு சிறிய தீப்பொறிகூட பெரிய வெடி விபத்தை உண்டாக்கலாம்.
- தொடர்ந்து காஸ் வாடை இருக்குமானால், இண்டேன் விநியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

**தினந்தோறும் பாதுகாப்பிற்காக இரு நிமிடங்களை ஒதுக்குங்கள்.**





**Indane**

பொதுமக்கள் நலனைக் கருதி வெளியிட்டோர்—இந்தியன்ஆயில்

Shilpi IOC 8A/88 Tam

# துன்பம் நேர்கையில்...

25



மங்களத்தால் இப்பொழுது நடமாட முடிவதில்லை. படுத்த படுக்கையிலேயே கிடக்கிறாள். வீட்டில் யாரும் யாருடனும் அதிகம் பேசிக்கொள்ளாமல் இறுக்கமான சூழ்நிலை நிலவியது. எல்லார் மனத்திலுமே குழப்பங்கள்! நடந்துபோன நிகழ்ச்சிகளில் எங்கே இருந்தது தவறு? யாரிடத்தில்?

உமா, தானுண்டு, தன் வேலையுண்டு என்று இருக்கிறாள். ஒரு பக்கம் பிள்ளை இறந்துவிட்ட வேதனை, மறு பக்கம் பெண்ணுக்குத் திருமணம் செய்ய முடியாத நிலை... மஹாதேவன் கூட்டுக்குள் அடைபட்ட பறவை போல் தம் அறைக்குள்ளேயே முடங்கிக் கொண்டு விட்டார்.

இதற்கு நடுவில் ஜடமாய், நடைப்பிணமாய் ஈஸ்வரி மட்டும் அந்தக் குடும்பத்தின் தேவைகளைக் கவனித்துக் கொண்டாள். இதுநாள் வரை மங்களம் செய்து வந்த வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் தானே பொறுப்பேற்றுக் கொண்டாள்.

என்னதான் கஷ்டங்கள் வந்தாலும் உமா தன் கடமையை மறக்கவில்லை. பேசி முடித்தபடி விமலாவுக்கும், நாராயணனுக்கும்

நல்ல நாளில் திருமணம் நடத்தி வைத்தான். விமலாவுக்குத் தேவையான உதவிகளைத் தானே செய்தான். சித்ரா, அவள் தனக்கு எழுதிக் கொடுத்த பணத்தை அப்படியே அவள் பேருக்கு மறுபடியும் மாற்றிக் கொடுத்து விட்டாள். விமலா அந்தப் பத்திரத்தை நாராயணனிடம் கொடுத்துவிட்டாள். அது அவன் தங்கையைக் கரையேற்ற உதவும் தோணி என்பதைச் சொல்லாமல் சொன்ன போது நாராயணன் நெகிழ்ந்து போனான். கடவுளுக்கு நன்றி சொன்னான், நல்ல மனைவியைத் தனக்குத் தந்ததற்காக.

உண்மைகள் தெரிந்ததும் சித்ரா வேதனைப் பட்டாள். தன் அக்காவையேவா தான் சந்தேகப்பட்டோம் தன் தங்கைதான் நான் என்று தெரிந்து அப்பா கையாலேயே கல்யாணம் பண்ணியவள் எனக்குத் துரோகம் செய்வாள் என்று எப்படிப் பைத்தியக்காரத்தனமாய் நினைத்து விட்டோம் என்று வேதனைப்பட்டாள். உமாவிடமும் மன்னிப்பும் கேட்டாள்.

கல்யாணமாகி இரண்டு குழந்தைகளும் ஆன பிறகு, இப்போது தைரியமாக அவளுக்கு அப்பாவை விட்டு முன்பு சம்பா மாமி கேட்ட சீர் அத்தனையும் செய்ய வைத்தாள் உமா.

இத்தனைக்கும் நடுவில் ஏதோ ஒரு வேதனை. என்ன சொல்லத் துடித்தான் ஹரி அன்று? அவளுக்கு மனசு கிடந்து தவித்தது. அதை நினைத்துத் தனிமையில் அடிக்கடி மௌனமாகக் கண்ணீர் விட்டாள். எதைச் சொல்லத் தவித்தாய் ஹரி? என்னிடம் எந்த உதவியை எதிர்பார்த்தாய்? அரற்றினாள் அடிக்கடி. அவன் இழப்பு அவளால் தாங்க முடியாத ஒன்றாகி விட்டது.

கனமான முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள் ஓடி ஒரு வருடம் முடிந்து விட்டது. மறுநாள் ஹரியின் நினைவு தினம்.

முதல் நாள் உமா ஆபீஸ் வேலையில் மூழ்கியிருந்தாள். நாராயணன் இண்டர்காமில் அவளுக்குப் போன் வந்திருப்பதாகத் தெரிவித்தான்.

போனைக் கையிலெடுத்தாள்.

"ஹலோ."

இனிமையான பெண் குரல் உச்சரிப்பில் மேல் நாட்டு வாடை அதிகம் இருந்தது.

தன் பெயர் கிறிஸ்டினா என்று கூறி அறிமுகப்படுத்திக்கொண்டவள் ஒரு முக்கியமான விஷயமாக உமாவைச் சந்திக்க வேண்டும் என்று கூறி அவளுடைய வசதியையும் கேட்டுக் கொண்டாள். யார்? என்ன விவரம்? என்று கேட்டபோது தான் நேரில் வந்து விவரமாகக் கூறுவதாகவும் சொல்லி விட்டாள்.

உமாவுக்குத் திகைப்பாக இருந்தது.

யார் இந்த கிறிஸ்டினா? எதற்காகத் தன்னைக் காண விரும்புகிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது.

தான் ஹோட்டல் மாரீஸில் தங்கியிருப்பதாகவும் மாலை ஆறு மணிக்குத் தன்னை வந்து பார்க்க முடியுமா என்றும் அவள் கேட்ட போது உமாவும் யார்? என்ன? என்று அறியும் ஆவலுடன் ஒப்புக் கொண்டாள்.

சரியாக ஆறு மணிக்கு உமா ஹோட்டல் மாரீஸில் நுழைந்தாள். ஊர் பேர் தெரியாத அந்தக் கிறிஸ்டினாவை எப்படி அடையாளம் கண்டு கொள்வது என்று கொஞ்சம் கவலை தோன்றியது. ரிஸப்ஷனில் ஓர் ஓரமாக உட்கார்ந்து கொண்டாள்.

ஒரு நிமிடம் கூட ஆகவில்லை. 'ஹல்லோ' என்ற இனிமையான குரல் கேட்டதும் நிமிர்ந்து பார்த்தாள்.

தங்கத்தை உருக்கி வார்த்தது போல், மேனியும், நீல நிறக் கண்களும், குண்டு முகமும், செம்பட்டை மயிருமாய், ஏனோ தானோவென்று கட்டப்பட்ட சேலை ரவிக்கையுடன் சிநேகமாகச் சிரித்தாள் அந்தப் பெண்.

"யூ ஆர் கிறிஸ்டினா..." உமா தயங்கினாள்.

"ஆமாம், நானேதான்" என்றாள் கொஞ்சம் தமிழில் அந்த அமெரிக்கப் பெண்.

"உங்களுக்குத் தமிழ் தெரியுமா?" உமா ரொம்ப ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"ஓ, நன்றாக. ஏன், தெரியக் கூடாதா? எங்கள் பாஷையை நீங்கள் பேசும்போது உங்கள் தமிழை நாங்கள் பேச முடியாதா என்ன?" என்றாள் இனிமையான குரலில்.

"ஆமாம், நான்தான் உமா என்று எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

"இதோ, இந்தப் புகைப்படத்தால்" என்று ஒரு சின்ன பாஸ்போர்ட் சைஸ் போட்டோவைக் காட்டினாள்.

இது... இது... ஹரியிடம் தான் கொடுத்த போட்டோ ஆயிற்றே. பின் பக்கம் உமா என்று கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருந்தாள். இது எப்படி இந்தப் பெண்ணிடம்...? உமா குழம்பினாள்.

"வாருங்கள், ஏதாவது லைட்டாகச் சாப்பிட்டுக் கொண்டே பேசுவோம். நான் எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். உங்கள் குழப்பம் எனக்குப் புரிகிறது."

இருவரும் உள்ளே சென்றனர். ஏற்கெனவே தங்களுக்கென்று ரிஸர்வ் பண்ணியிருந்த டேபிளுக்கு உமாவை அழைத்துச் சென்றாள் கிறிஸ்டினா.

சிறிது நேரம் கனமாக ஊர்ந்தது. பேரர் டிபன் பிளேட்டுகளைக் கொண்டு வந்து வைத்தான். சாண்ட்விச்சும், தக்காளி சூப்பும் எதிரில் வைக்கப்பட்டன.

"சாப்பிடுங்கள்" என்றாள் அவள்.

உமா ஸ்பூனைக் கையிலெடுத்து சூப்பை மெதுவாகக் கலக்கினாள்.

"நாங்கள் மிஸ்டர் ஹரியுடன் படித்த சக மாணவிகள். மிஸ்டர் ஹரி உங்களுக்கு..." என்று நிறுத்தினாள்.

"தம்பி" என்றாள் சட்டென்று.

**வித்யா சுப்ரமணியம்**

"அப்படியா? அவர் உங்களை அக்கா என்று கூறவில்லை. தனக்கு உதவிகள் செய்து வரும் தெய்வம் என்றுதான் உங்களைப் பற்றி எங்களிடம் சொல்வார்."

உமா தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். கண்களில் கூட ஆரம்பித்திருந்த நீரைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

"அமெரிக்காவில், படிக்கும் நேரம் தவிர அவர் என் போன்ற சிலருக்கு தமிழ் வகுப்புகளும் நடத்தினார். அவரின் திறமையின் காரணமாகவே தமிழின் பால் ஈர்க்கப்பட்டு நிறைய பேர் அவருடைய வகுப்புகளில் சேர்ந்தனர்.

ஹரி மிகவும் நல்ல மாதிரி. ஒரு நல்ல இந்தியர் எங்களுக்கு நண்பராகக் கிடைத்ததற்காக நாங்கள் மிகவும் பெருமைப்பட்டோம். முக்கியமாக நானும் என் உயிர் சிநேகிதி ஜுலியும்.

ஹரியுடன் பழகின கொஞ்ச நாளிலேயே ஹரியின் மேல் அடங்காக் காதல் கொண்டு விட்டாள் ஜுலி. அவளுடைய லட்சியமே ஒரு இந்தியனைத் திருமணம் புரிந்து கொண்டு இந்தியப் பெண்களைப் போல் தானும் கணவனுக்காக எதையும் செய்ய வேண்டும் என்பதுதான். இந்தியப் பண்பாட்டைப் பற்றியும், பகவத் கீதையின் மொழி பெயர்ப்பையும் படித்துப் பார்த்து ஏற்கனவே மயங்கிக் கிடந்தவள் ஹரியைப் போன்ற ஒரு உயர்ந்த இந்தியனிடம் மனதைப் பறிகொடுத்தது எனக்கு வியப்பாகத் தோன்றவில்லை.

மூன்று வருடங்கள் அவர்களின் காதல் ஒரு எல்லைக்குட்பட்டே இருந்தது. அது உடல் வெறிபிடித்த காதல் அல்ல. உன்னதமான உயர்ந்த காதல் என்பதை அவர்கள் பழகின விதத்திலிருந்தே புரிந்து கொண்டு பெருமைப்பட்டேன்.

இருந்தாலும் எத்தனை நாட்கள். அவர்கள் உயர்ந்தவர்களாகவோ, ஞானிகளாகவோ இருக்க முடியும்? அவர்களும் சராசரி மனிதர்கள்தானே. ஒரு நாள் ஜுலியின் உடலை அடையும் ஒரு ஆசை தனக்குள் வந்ததும் அந்த கண்ணியவான் கண நேரம் கூட தாமதிக்காமல் அவளை சட்டப்படி திருமணம் செய்து கொண்ட பிறகே அவளை தன் மனைவியாக நடத்தினார்.

அவர்கள் அதற்குப் பிறகு சேர்ந்து வாழ்ந்தது ஆறே மாதங்கள்தான். அதற்குள் ஹரி இந்தியா திரும்ப வேண்டிய காலம் வந்து விட்டது. அதற்கு மேல் அவரால் சட்டப்படி அங்கு தங்கவும் முடியாது. ஆனால் ஜுலியோ நான்கு மாத கர்ப்பிணி. அவளுக்குச் சட்டென்று இந்தியா வர அனுமதி கிடைக்கவில்லை. எனவே ஹரிக்குக் கண்ணீருடன் விடை கொடுத்தாள். இன்னும் இரண்டு மூன்று மாதத்தில் அவளை எப்படியாவது அழைத்துக் கொள்வதாக சத்தியம் செய்து விட்டுத்தான் விமானத்தில் ஏறினார் ஹரி. அவர் கிளம்பிய மறுநாள் என் ஆராய்ச்சிக் குழுவோடு சுற்றுப் பயணம் செய்ய நானும் இந்தியா வந்தேன். ஆனால்..." அவளுடைய குரல் சட்டென்று கம்மியது.

மூச்சைப் பிடித்துக் கொண்டு கேட்டாள் உமா. ஹரியின் வாழ்க்கைப் புத்தகத்தின் ரகசிய ஏடுகள் அங்கு படிக்கப்பட்ட போது அவளை அது அதிர்ச்சியடைய வைத்தது.

"வந்த இரண்டாம் நாளே ஹரியின் விபத்துச் செய்தியையும் அதில் அவர் மரணமடைந்து விட்டதையும் பத்திரிகையில் பார்த்து அதிர்ச்சியடைந்தேன். சுற்றுப் பயணத்தை பாதியிலேயே ரத்து செய்து விட்டு

---

# ஏழ்-தான் வரவேண்டும்!




ஒரு குழந்தை நல்லவளாகவோ கெட்டவளாகவோ வளர்வதற்கு எப்படி தாய் தந்தையரும், சுற்றமும், பழக்க வழக்கங்களும், வளர்க்கும் விதமும் காரணமாகின்றனவோ அதே அளவு ஒரு ஆசிரியையின் பங்கும் அமைந்து விடுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை.

நான் இலங்கையில் படித்துக் கொண்டிருந்த சமயம். எனக்கு ஆங்கிலம், மனையியல், சுகாதாரம் போன்ற பாடங்கட்கு ஆசிரியையாக இருந்தவர் செல்வி. சிபில் சோம

நான் மட்டும் மறுபடியும் அமெரிக்கா திரும்பினேன்.

நான்கு மாத கர்ப்பிணியான அவளுக்கு அந்த அதிர்ச்சியான செய்தியைச் சொல்லாமல் மறைத்து அவளைக் கண்ணுக்குள் வைத்து பாதுகாத்தேன். தினம் தினம் ஹாரியின் கடிதத்தை எதிர்பார்த்து ஏங்கினாள் அந்தப் பேதை. ஒரு நாள் நானே பொய் சொன்னேன். ஹாரி என்னுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டதாகவும் அவளுடன் லைன் கிடைக்காததால்தான் என்னுடன் தொடர்பு கொண்டார் என்றும் சொன்னேன். அந்த பேதைப் பெண் அதை உண்மையென்று நம்பி என்னுடன் ஹாரி பேசினதற்கே சந்தோஷக் கூத்தாடினாள். இன்னும் மூன்று மாதத்தில் ஹாரி அமெரிக்கா வந்து அவளை அழைத்துப் போவார் என்றும் அவள் நலம் கருதி பொய் சொன்னேன்.

அன்றிலிருந்தே அவள் நாட்களை எண்ணத் தொடங்கினாள். ஹாரி தனக்கு இந்திய முறைப்படி கட்டின தாலியை எடுத்து முத்தமிட்டுக் கொள்வாள். ஆனால் ஹாரியின் நினைப்பில் தன் உடலை அந்த பெண் சரிவர கவனித்துக் கொள்ளவில்லை. நேரத்திற்கு சாப்பிடாமல் என்னவோ கடனுக்கு வாழ்வது போல இருந்தாள். அவள் கருவில் இருக்கும் குழந்தைக்காக நான் வற்புறுத்தி அவளை ஏதாவது சாப்பிட வைத்தால்தான் உண்டு. அவள் உடல் ஒன்பது மாதத்தில் ரொம்ப பலவீனமடைந்து விட்டது. குழந்தையை பிரசவிக்கும் சக்தி கூட, அவள் உடலில் அப்போது இல்லை. உடல் இளைத்து கண்கள் உள்ளுக்குப் போய்... அந்த நிலையில் அவளுக்கு ஒரு நாள் வலி கண்டது. அவளை ஹாஸ்பிடலில் சேர்த்தேன். அங்கு அவள் ஒரு அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். ஹாரி தனக்குக் கொடுத்திருந்த அந்தப் பரிசைப் பார்த்து பார்த்து பெருமைப்பட்டாள். ஹாரியின் அட்ரஸை எனக்குக் கொடுத்து தகவல் தெரிவிக்கச் சொன்னாள்.

நான் மறுபடியும் ஒரு பொய் சொன்னேன். ஹாரி இன்னும் பத்தே நாளில் வந்து விடுவார் என்று. சந்தோஷத்தில் பூரித்தவள் அத்துடனேயே போய் விட்டாள். லேசான ஜுரத்துடன் இருந்தவள் நேரமாக ஆக அதிகமாகி ஜன்னி கண்டு ஹாரி, ஹாரி என்ற உச்சரிப்பிலேயே இறந்து விட்டாள்.

குழந்தை பிறந்தவுடன் அவளைப் போய் பார்த்ததும் அவள் என்னிடம் சொன்னது என்ன தெரியுமா? "கிறிஸ்டி இது ஹாரியின் குழந்தை. நான் ஹாரியுடன் இந்தியா போவேன். இதை ஒரு இந்தியக் குழந்தையாகத்தான் வளர்ப்பேன். இவனும் ஹாரியைப் போலவே உத்தமனாக வளர்வான்" அப்படியே ஹாரியால் வரமுடியாமல் போனால் நானே தனியாக இந்தியா போய் ஹாரியுடன் சேர்ந்து விடுவேன். மொத்தத்தில் என் மகன் ஒரு இந்தியனாக வளர்வதுதான் எனக்குப் பெருமை."

இப்படிச் சொல்லி பெருமைப் பட்டவள் கடைசி வரை ஹாரி இறந்த அதிர்ச்சியான செய்தி காதில் விழாமலேயே ஒரு உத்தமியாக இறந்தாள். ஒரு பெருமூச்சுடன் கிறிஸ்டினா நிறுத்தின போது உமாவால் அழுகையை அடக்க முடியவில்லை.

(தொடரும்)

---

நாதர் என்பவர்.

ஒருநாள் எங்களுடைய விடுதி வார்டனும் அவரும் அவரது அறையில் பேசிக் கொண்டிருந்தபோது நான் அவர்களுடைய அறையைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தேன். அப்போது என்னைக் கூப்பிட்டார் என் ஆசிரியை. வார்டன் அவரிடம்;

"இவள் கெட்டிக்காரிதான். ஆனால், விளையாடும் போது, போடும் சத்தந்தான் தாங்க முடியவில்லை" என்றார்.

என் ஆசிரியை என்னைப் பார்த்து, "உன்னைப் பற்றிய மற்றவர்களுடைய அபிப்பிராயத்தில் and வரவேண்டுமே தவிர but வரக் கூடாது" என்றார்.

வார்டன் குறிப்பிட்ட குறை ரொம்ப சர்வசாதாரணமானதுதான். ஆனால் அதை ஒட்டி என் ஆசிரியை என்னிடம் சொன்ன கருத்து இருக்கிறதே அதுதான் விலை உயர்ந்தது. இப்படி ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு அறிவுரை கூறுவார். அவர் கற்றுக் கொடுத்த இலக்கணமும், பெட்சீட் விரிப்பது முதல் முதலுதவி செய்வது வரை அவர் கற்றுக் கொடுத்த மனையியலும் இன்னின்ன உணவுகள் இன்னின்ன மாற்றத்தை ஏற்படுத்தும் என்றும் வியாதிகள் எந்தெந்தப் பழக்க வழக்கங்களினால் ஏற்படுகின்றன என்று அவர் சொல்லிக் கொடுத்த சுகாதாரமும் கிட்டத்தட்ட இருபது வருடங்கள் கழித்தும் என் மனத்தில் பசுமரத்தாணிகளாய் பின்னிப் பிணைந்து கொண்டிருக்கின்றன. சதவிகிதக் கணக்குப்படி அவர் சொல்லிக் கொடுத்த சம்பளப்பட்டியல்தான் இன்னும் என் குடும்பம் சீராக ஓட உதவுகிறது.

இலங்கையின் இன்றைய சூழ்நிலையில் என் ஆசிரியை தெய்வம் இருக்கிறதோ மறைந்து விட்டதோ! எந்தச் சூழ்நிலையிலும் வாழ்நாள் முழுவதும் என்னால் மறக்க முடியாதவர் அவர்.

— உதயா அழகப்பன்.

# தன்னம்பிக்கை



ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் இயலாது என்று ஒரு நாளும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள். எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும் போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கை தான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால் நம்மில் பலர் ஓரளவு கல்வித் தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத் தயங்குகிறார்கள்.

தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமும், முறையான பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான முக்கியமான காரணங்களாகும்.

உங்களது இத்தயக்கத்தைப் போக்கி நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத விவேகானந்தா கல்வி நிலையத்தினர் தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள். நேர்முகப் பயிற்சியும் உண்டு. இப்பயிற்சியைப் பற்றி மேலும் தகவல் அறிய விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்குக் கடிதம் எழுதி இலவசமாக தகவல் புத்தகத்தைப் பெற்றுப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாமே!

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**
**9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-600 017**



கலந்துரையாடல்:

# எங்க டீச்சர்

**தங்கள் டீச்சரைப் பற்றியும், படிப்பைப் பற்றியும் குழந்தைகளின் கணிப்பு என்ன?**

1. ராஜேஷ் — 8 - ஆம் வகுப்பு.
2. கௌசிக் — 7 - ஆம் வகுப்பு.
3. ஸ்மிதா — 4 - ஆம் வகுப்பு.
4. சந்தீப் — 2 - ஆம் வகுப்பு.
5. அனிதா — யு. கே. ஜி..
6. மங்களலக்ஷ்மி — 1 - வது வகுப்பு.
7. என். பாலாஜி — 1 - வது வகுப்பு.
5. அனிதா — யு. கே. ஜி.

சந்தீப்: எங்க கிளாஸ் டீச்சர் சந்திரா மிஸ் ரொம்ப நல்லவங்க.

ராஜேஷ்: நல்லவங்கன்னு எப்படி சொல்றே?

சந்தீப்: அடிக்கவே மாட்டாங்க. அதான் நல்லவங்க.

ஸ்மிதா: போடா! வெறும் அடிக்காததால மட்டும் தான் சொல்லியா? நம்ப நல்லதுக்கு தானே அடிப்பாங்க?

கௌசிக்: ஏன் அடிக்கணும்? நமக்கு நல்லதுங்கறதை அடிக்காம சொல்றது. டீச்சர்னு நல்லா பாடம் சொல்லித் தரணும். எனக்கு, நல்லா புரியறா மாதிரி சொல்லித் தர டீச்சர்தாம்ப்பா பிடிக்கும்.

அனிதா: எங்க கமலா மிஸ் எங்க கூடவெல்லாம் ரிங்கா ரிங்கா ரோஸஸ் விளையாடுவாங்க தெரியுமா!

ராஜேஷ்: திங்கள் கிழமை ஸ்கூலுக்குப் போனா டீ.வி. பத்தித்தான் பேசுவோம். சில சமயம் மிஸ் கூட எங்களோட சேர்ந்து பேசுவாங்க.

சந்தீப்: ராமாயணம் பாத்தீங்களான்னு எங்க மிஸ்ஸே கேப்பாங்க.

கௌசிக்: அதுக்காக சில பசங்க கிளாஸ்லயே காமிக்ஸ்ஸெல்லாம் படிக்கறது தப்பில்லையா?

ஸ்மிதா: அதாண்டா. கொஞ்சம் ஜாலியா டீச்சர்ஸ் இருந்தா ரொம்ப இப்படியெல்லாம் பண்ணி அவங்களைக் கோபப்படுத்திடு





வாங்க.

மங்கள லக்ஷ்மி: எங்க பள்ளில ஹோம் ஓர்க் செய்யலேன்னு முட்டிபோட சொல்லு வாங்க.

என். பாலாஜி: எங்களையெல்லாம் அடிப்பாங்க. தினமும் ஒழுங்கா படிச்சிட்டு வரணும்.

ராஜேஷ்: போன வருஷம் வந்த டீச்சர் தான் ரொம்ப நிதானமா பாடம் சொல்லித் தருவாங்க. இந்த டீச்சர் கிடுகிடுன்னு நோட்ஸ் தந்திடுவாங்க. குறுக்கே கேட்டா 'எக்ஸ்ப்ளெய்ன்' பண்ணவே மாட்டாங்க. ஒரேடியா கத்துவாங்க.

ஸ்மிதா: டீச்சர்ஸ் எப்பவும் மெதுவா பேசி சிரிச்சிக்கிட்டே இருந்தாத்தான் நல்லா இருக்கும். ஸ்கூலுக்குப் போகவே பிடிக்கும்.

—ஸந்தீப்: எங்க கிளாஸ் பசங்க ரொம்ப வாலு தெரியுமா? ராம் குமார் இருக்கானே, மிஸ் அந்தப் பக்கம் போனா வெளியில போய் நிப்பான். ஒன்னு சத்தம் போடு வான். இப்படிப் பண்ணா ஏன் மிஸ்ஸுக் குக் கோவம் வராது?

கௌசிக்: பசங்கன்னா குறும்புதான் செய்வாங்க. 'கைண்டா' சொல்லணும்.

மங்கள லக்ஷ்மி: என் வீட்டுல அம்மா அப்பாவெல்லாம் அடிக்கறதில்லையான்ன!

அனிதா: என்னை எங்கியுமே யாருமே அடிக்க மாட்டாங்க.

ராஜேஷ்: ஸ்கூல்லதான் நாம நிறைய நேரம் இருக்கோம். அங்க டீச்சர்லெல்லாம் தான் நமக்கு நிறைய நல்லதெல்லாம் சொல் லித் தராங்க.

கௌசிக்: அன்பாய் சொல்லிக் கொடுத் தாத்தான் எதுவுமே நல்லாப் புரியும். என் தங்கைக்குவீட்டுலபாடம்சொல்லிக்கொடுப் பேன். ஏதாவது ஒன்னு தெரியலேன்னு அவளைக் கோவிச்சுக்கிட்டா உடனே எழுந்து போயிடுவா. நிதானமா, பொறுமையாச் சொல்லிக் கொடுத்தா உட்கார்ந்து நிறைய படிப்பா.

ஸ்மிதா: சில ஸ்கூல்ல எல்லாம் நிறைய 'ஹோம் வொர்க்' கொடுத்துட்டு, பண்ணிக் கிட்டு வரலேன்னு வெளியிலேயே கால் கடுக்க நிக்க வைப்பாங்களாமே?

ராஜேஷ்: நான் கூடக் கேள்விப்பட்டிருக் கேன். ஒரு ஸ்கூல்ல 'ஹோம் வொர்க்' பண்ணலேன்னு இருட்டு ரூம்ல போட்டு







# பட்டர்ஃப்ளை®

## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கரை

இன்றே பெற்றிடுவீர் ...




பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர் தயாரிப்பாளர்கள் இந்தத் துறையில் 40 ஆண்டுகளுக்கும் மேல் அனுபவம் பெற்றவர்கள். உலகத்தரத்திற்கு ஈடான சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 18G தகடுகளைக் கொண்டு நவீன இயந்திரங்கள் மூலம் வடிவமைக்கப்பட்டுள்ளது பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர். இதனைக் கொண்டு எந்த அலுமினியக் குக்கரையும் விட மிகக்குறைந்த நேரத்தில் சமைத்து விடலாம்.

மேலும்

- மிகவும் பாதுகாப்பானவை
- 30% எரிபொருள் மிச்சம்
- உணவுப் பொருள்களின் மணமும், ருசியும் மாறுவதில்லை
- மிகவும் சுகாதாரமானது
- பளபளப்பை இழப்பதில்லை

**பட்டர்ஃப்ளை**
ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர்
அழகிய வனப்பிற்கும் நீண்டகால உபயோகத்திற்கும்

இவ்வளவு அருமையான அம்சங்கள் கொண்ட பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கருக்கு நீங்கள் தரும் விலையோ அலுமினிய பிரஷர் குக்கரை விட ரூ.90/- மட்டுமே அதிகம். அதாவது சுமார் 15% அதிகம். நன்கு சிந்தியுங்கள். சிறந்ததை தேர்ந்தெடுங்கள். அது ஒரு பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிரஷர் குக்கராகத் தான் இருக்க முடியும்.

3, 5, 6, 7.5, 10 & 12
லிட்டர்களில் உள்ளன.
இரண்டு வித பிரஷர் பான்களும் உள்ளன



தயாரிப்பாளர்கள் :
**கங்காதரம் எண்டர்பிரைஸஸ்**
272, அண்ணா சாலை, தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
போன் : 454186, 458722, 453056.

Concept/M/1092

மூடிடுவாங்களாம்.

சந்தீப்: சீ... பொய். அப்படி எல்லாம் செய்வாங்களா?

மங்களலக்ஷ்மி: அந்த மாதிரி ஸ்கூலுக்குப் பசங்க போகவே கூடாது.

சந்தீப்: எங்க ஸ்கூல்ல டீ. வி. யெல்லாம் கூடப் பார்க்கலாம். அப்புறம் பாட்டு, டான்ஸ் எல்லாமே இருக்கு.

என். பாலாஜி: எங்களுக்குப் பாடம் தவிர வேற எதுவுமே கிடையாது.

அனிதா: எங்க ஸ்கூல்ல ஸ்லோகமெல்லாம் சொல்லித் தருவாங்க. சந்திரா மிஸ் தூக்கி வெச்சுப்பாங்க.

கௌசிக்: மொத்தத்துல டீச்சர்ஸ் நம்ப கிட்ட அன்பா இருந்து கண்டிக்கறதை விட ஸாஃப்டா சொன்னாத்தான் நமக்கு ஸ்கூலுக்குப் போகவே பிடிக்கும். இல்லையா!

ராஜேஷ்: அப்பப்ப ஹெட் மாஸ்டர் பிள்ளைங்ககிட்டயே நேரடியா டீச்சர்ஸைப் பத்தி கேக்கணும்.

மங்களலக்ஷ்மி, பாலாஜி: டயமாச்சு எங்கம்மா கோபிச்சுப்பாங்க.

கௌசிக்: ஆமா நான் கூட நிறைய 'ஹோம் வொர்க்' செய்யணும். கிளம்பலாமா!

எல்லோரும் டாடா பை பை என்று கூறி விடை பெற்றுக் கொள்கின்றனர்.

— தொகுப்பு — **கிரிஜா ராகவன்**

புகைப்படங்கள் **கீதாஞ்சலி ஸ்டுடியோ**

---




பள்ளியை மாணவர்களே நடத்துவார்கள்!

அடையாறிலுள்ள இந்து மேல்நிலைப் பள்ளியில் வருடா வருடம் ஆசிரியர் தினத்தின் போது (செப்டம்பர் 5) புதுமை ஒன்று நிகழ்கிறது. இப்பள்ளிக் கூடத்தில் அன்று ஆசிரியர்கள் யாருமே வகுப்பறைகளுக்குச் சென்று பாடம் எடுப்பதில்லை. அதற்கு மாறாக பத்தாம் வகுப்பு மற்றும் பிளஸ் ஒன், பிளஸ் டூ மாணவ மாணவியர்களில் திறமையானவர்களைத் தேர்ந்தெடுத்து ஒன்றாம் வகுப்பு முதல் பிளஸ் டூ வரை அவர்களைக் கொண்டே பாடம் எடுக்கச் சொல்கிறார்கள்.

அன்று பள்ளித் தலைமை ஆசிரியராகச் செயல்படுவது கூட ஒரு மாணவன் தான். காலை நேர பிரேயர் கிளாஸ் நடத்துவது முதல் யார் யாரை எங்கு அனுப்புவது? வகுப்புக்கு மாணவர்கள் ஒழுங்காக வந்திருக்கிறார்களா? என்று வருகை ஏட்டில் பதிவு செய்வது வரை எல்லாப் பொறுப்புக்களையும் மாணவர்களைக் கொண்டே நிர்வகிக்கச் சொல்கிறார்கள்.

இப்பள்ளியின் முதல்வர் திரு வெங்கடாஜலம், இது போன்ற செய்கையால் மாணவர் — ஆசிரியர் நெருக்கம் இன்னும் அதிகமாவதோடு, மாணவர்களுக்குப் பயம் தெளிந்து, ஓர் ஆளுமைத் தன்மை (leadership quality) ஏற்படுவதாகச் சொன்னார். வீணாக ஆசிரியர்களைக் கலாட்டா செய்யும் பழக்கமும் குறைகிறது. ஏனென்றால் ஆசிரியர்களின் சிரமத்தை அவர்கள் அறிய முடிகிறதல்லவா?''

## முதல் ரேங்கிற்கு இரண்டு சாக்லேட்

சென்னை இராயப்பேட்டையிலுள்ள வெங்கடேஸ்வரா மெட்ரிகுலேஷன் பள்ளிக்கூடத்தில் மாதா மாதம் மாணவர்களுக்கு வழங்கும் மதிப்பெண் அட்டையோடு சாக்லேட்டையும் வழங்குகிறார் முதல்வர் சீனிவாசன். முதல் ரேங்குகள் எடுக்கும் மாணவர்களுக்கு இரண்டு சாக்லேட்டும் மற்ற மாணவர்களுக்கு ஒரு சாக்லேட்டும்வழங்கப்படுவதாகச்சொன்னார்.

மதிப்பெண் அட்டையை வழங்கும் போதே, 'இந்த முறை நீ ஒரு சாக்லேட் தான் வாங்கியிருக்கிறாய். முதல் ரேங்க் வாங்க முயற்சி செய். அடுத்த மாதமே உனக்கு இரண்டு சாக்லேட் கிடைக்கும்' — என்று மழலைகளின் மொழியிலே சொல்கிறார் முதல்வர். இதனால் சிறிய மாணவர்களுக்குப் படிப்பின் மீது தனி கவனம் ஏற்பட்டு முதல் ரேங்க் வாங்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். அப்படி குழந்தைகள் முயற்சியும் செய்கிறார்களாம். இந்த முறையை முதல் மூன்று வகுப்புகளுக்கு மற்ற பள்ளிக்கூடங்களும் பின்பற்றலாமே?

— ஹரிதன்



# இந்த மாதம் எப்படி?

## பிப்ரவரி '88

பிறந்த தேதி 1, 10, 19, 28
கூட்டு எண். 1.

இம்மாதம் நீங்கள் சிறிய விஷயமாயினும் அதில் சிறந்த கவனம் செலுத்த வேண்டும். உங்கள் கருத்தைப் பிறருக்குக் கூறுமுன் நன்கு சிந்தித்து தெளிந்த பின்பே அதைச் சொல்ல வேண்டும். உங்கள் எதிர்கால முன்னேற்றத்திற்குரிய திட்டங்களைத் தீட்டுவதற்கு ஏற்ற மாதம். எனவே மற்றவர்களுடன், விஷயம் தெரிந்தவர்களுடன் அத்திட்டங்களைப் பற்றி ஆலோசனை செய்யுங்கள். குறிப்பாக அந்தத் திட்டங்கள் நிலத்தடி நீர் விஷயமாகவும் இருக்கலாம். அல்லது வெளிநாட்டுப் பிரயாணங்களாகவும் இருக்கலாம். குளிர் சாதனங்களைப் பற்றியும் இருக்கலாம். சிறு சச்சரவுகளுக்கும், மனக் குழப்பத்திற்கும் மாதத்தின் பிற்பகுதியில் ஆளாவீர்கள். அதனால் உங்கள் மதிப்பும் நாணயமும் குறையலாம். 2, 11, 14, 20 ஆகிய தேதிகள் ஏற்றமுடையவை. ஞாயிற்றுக் கிழமையும், புதன் கிழமையும் உங்களைத் தேடி நல்ல அதிர்ஷ்டம் வரலாம். 11ஆம் தேதியில் பிறந்தவர்கள் இதுவரை இருந்த சிக்கலில் இருந்து நீங்கி முன்னேற்றப் பாதையில் அடிவைப்பீர்கள்.

பிறந்த தேதி 2, 11, 20, 29
கூட்டு எண். 2.

மிக உற்சாகமான மாதமாகும். உங்களைப் பற்றி மற்றவர்கள் உயர்வாக நினைக்கக் கூடிய தருணம் வந்து விட்டது. எனவே உங்கள் ஆற்றலைக் காட்டலாம். அத்தகைய ஆற்றல் தொழில் துறை, கலைத் துறை, இலக்கியத் துறை ஆகிய ஏதாவது ஒன்றின் மூலம் உங்களுக்குப் புகழ் வரக்கூடும். உங்களிடமுள்ள சிறந்த, உயர்ந்த ஆடை, அணிகளை அணிந்து கொண்டு உற்றார், உறவினர்களுடன் உற்சாகமாகப் பழகக் கூடிய சுப நிகழ்ச்சிகள் நடக்கும். அதே சமயம் யாரையும் அலட்சியம்செய்துவிடாதீர்கள். ஏனென்றால் இந்த மாதத்தில் நீங்கள் 3, 9, 5 ஆகிய தேதிகளில் அல்லது தொடர் தேதிகளில் பிறருடன் மோத வேண்டிய நிலை ஏற்படும். எனவே அளவுக்கு மீறிய சுதந்திரம் எடுத்துக் கொண்டு பிறர் விஷயத்தில் தலையிட்டு பிறகு வேதனைப்பட வேண்டியிருக்கும்.

பிறந்த தேதி 3, 12, 21, 30
கூட்டு எண். 3.

கடினமாக உழைக்க வேண்டிய மாதம். எனவே திட்டமிட்டு சரிவர செயல்படுங்கள். இம்மாத வரவு, செலவில் நீங்கள் சற்று கவனமாக இருக்க வேண்டும். கூடுதலாக உழைக்க வேண்டிவரும். விருந்தினர்கள், நண்பர்கள் என அநேகர் வந்து, உங்கள் பட்ஜட்டில் கைவைத்து விடுவார்கள். பிப்ரவரி மாதத்தில் 12ம் தேதிக்குமேல் உங்களுக்கு ஒரு எதிர்பாராத அதிர்ஷ்டம் காத்திருக்கிறது. அந்த அதிர்ஷ்டம் மாநிறமும், பொன்னிறமும் கொண்ட இருவரால் உங்களுக்கு மாதப் பிற்பகுதி மனத்துக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும். விற்பனையாகாமல் முடங்கிக் கிடக்கும் பொருட்களுக்கு கிராக்கி ஏற்பட்டு அதனால் நீங்கள் லாபம் அடைவீர்கள். 3, 21 இந்த எண்கள், தேதிகள் உங்களுக்கு அதிர்ஷ்டம் தரும். 7ம் தேதி ஏற்றதல்ல.

பிறந்த தேதி 4, 13, 22, 31
கூட்டு எண். 4.

எதிர்பாராத நேரத்தில் இதுவரை எதிர்பார்த்து ஏமாற்றத்தை அளித்து வந்த விஷயங்கள் உங்களைத் தேடி நல்ல லாபத்துடன் வந்து நிற்கும். பகைவர்களும் உறவாவார்கள். பதவி உயர்வு கிடைக்கும். போட்டிப் பந்தயத்தில் வெற்றியுண்டு. பிரயாணங்கள்

செல்வதும், விழாக்களில் கலந்து கொள்வதுமாக காலம் போவதே தெரியாத அளவுக்கு வேகமாகச் செல்லும். அதே சமயத்தில் சில விரயங்கள் ஏற்படலாம். கேளிக்கை, யாத்திரை இவைகளில் ஈடுபாடு ஏற்படும். உடலில் பல இடங்களில் மச்சமும், மருவும் உள்ள பெண் ஒருவரால் நன்மை ஏற்படலாம். உங்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் சில கவனக் குறைவுகள் ஏற்பட்டு அதனால் ஒரு சிலருக்கு மனவேதனை உண்டாகும். குறிப்பாக சிம்ம ராசிக்காரர்களும், துலா ராசிக்காரர்களும் சற்று எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். அது போலவே 3, 9 எண் காரர்களால் சில கஷ்டங்கள் விளையலாம். இந்த எண் கொண்ட தேதிகளையும் ஒதுக்குங்கள். 4, 1, 10, 28 ஆகிய தேதிகள் அதிர்ஷ்டம் தரும்.

---

பிறந்த தேதி 5, 14, 23
கூட்டு எண் 5.

---

இந்த மாதத்தில் நீங்கள் அதிகமான பொறுப்புகளை ஏற்க வேண்டியிருக்கும். அத்தகைய பொறுப்புகள் குடும்ப சம்பந்தமாகவும் இருக்கலாம். அல்லது தொழில் துறை அலுவலகம் இவை சம்பந்தமாகவும் இருக்கலாம். உங்களுக்கும் உங்களைச் சார்ந்தவர்களுக்குமிடையே இருந்த கசப்புணர்வு மறைவதற்குரிய வாய்ப்புகள் வரும். அதை நன்கு பயன்படுத்தி வேற்றுமைகளை களைவது விவேகமான செயலாகும். ஆனால் அதே சமயத்தில் ஒரிருவர் தங்கள் நலனுக்கு உங்களைப் பகடைக் காயாகப் பயன்படுத்த இருக்கிறார்கள். அதற்கு இடம் கொடாமல் பார்த்துக் கொள்ளவும். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு அவசியம். அஜீர்ணம், அலர்ஜி ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. இம் மாதத்தில் எடுக்கும் எந்தப் பணியும், முடிவில் உங்களை வெற்றிப் பாதைக்கு இட்டுச் செல்லும். உகந்த நாள் வெள்ளி. தேதிகள் 5, 14, 23, 6, 15, 29.

---

பிறந்த தேதி 6, 15, 24
கூட்டு எண். 6.

---

இந்த மாதம் 15ம் தேதிக்குப் பிறகே ஒரு நல்ல சூழ்நிலை உருவாகும். சனீஸ்வரரின் சஞ்சாரம் சாதகமாக இல்லை. எனவே பக்தி, த்யானம் இவற்றில் ஈடுபாடு அதிகம் ஏற்படும். உள்ளார்ந்த நம்பிக்கையுடன் அவற்றில் ஈடுபடுங்கள். உறவினர் ஒருவரால் மனக் கசப்புக்கு இடம் உண்டு. அதைப் பெரிது படுத்த வேண்டாம். யாரையும், எதற்காகவும் கட்டாயப்படுத்த வேண்டாம். அதனால் மனக் கசப்பு வளர்வதற்கு வாய்ப்பு உண்டு. மருமகள், மாமியார், நாத்திமார் உறவுகள் சற்று பாதிக்கலாம். எனவே வாக்கை அளந்து உபயோகப்படுத்தவும். பிப்ரவரியின் பிற்பகுதி மிக நல்ல சூழ்நிலையை குரு பகவான் உருவாக்கித் தர இருக்கிறார். எனவே தடைபட்ட திருமணப், பதவி உயர்வு இவை கைகூடி வரும். ஏற்ற தேதிகள் 5, 6, 14, 16, 23 புதன் கிழமை, வெள்ளிக் கிழமை ஏற்றவை. வெளி வட்டார நிகழ்ச்சிகளை ரத்து செய்வது நல்லது.

---

பிறந்த தேதி 7, 16, 25
கூட்டு எண். 7.

---

இந்த மாதத்தில் உங்கள் தொழிலில் கணிசமான முன்னேற்றமுண்டு. எதிர்பாராத பரிசு ஒன்று கிடைக்கும். உங்கள் வீட்டுக்காரர் சம்பந்தப்பட்ட தொழில் துறையில் பொருட்களுக்கு நல்லமார்க்கெட் கிடைக்கும். அதனால் லாபம் கணிசமாக உயரும். ஆனால் அதே சமயத்தில் வரி உயர்வினால், வருமான வரி இலாகாவினராலும் சற்று பாதகம் ஏற்படும். அதன் காரணமாக அலைச்சல் உண்டு. பெரிய மனிதர்களைச் சந்திக்க வேண்டி இருக்கும். அது நன்மையைத் தரலாம். பண விரயத்திற்கு வாய்ப்பு மிக அதிகம். ஏற்ற தேதிகள் 7, 16, 25. வெள்ளியும், செவ்வாயும் உகந்தவை.

---

பிறந்த தேதி 8, 17, 26
கூட்டு எண். 8.

---

உங்கள் எண்ணின் நாயகன் இடம் பெயரும் மாதம். அதனால் இடர்கள் குறையும். தள்ளிப் போட்ட திட்டத்தை மீண்டும் புதுப்பியுங்கள். வாகன யோகம் உண்டு. புது வண்டிகள் வாங்கலாம். கன்னிப் பெண்களுக்கு திருமணம் கைகூடி வரும். உங்கள் வீட்டில் பிறக்கப் போகும் குழந்தையால் அதிர்ஷ்டம் ஏற்படும். கருப்பு நிற நண்பர்கள் கணக்குப் பார்க்காமல் உதவுவார். பொருளாதாரம் சற்று சிரமத்தைத் தந்தாலும் மேற்படி நண்பரால் சற்று சிரமம் குறையலாம். வீடு வாங்கும் யோகம் சிலருக்கு ஏற்படும். பங்கு மார்க்கெட்டில் சம்பந்தப்பட்ட உங்கள் கணவர் உன்னதமான இலாபத்தை அடையும் சூழ்நிலை உருவாகிறது. இயந்திர வியாபாரிகளானாலும் அபரிமிதமான லாபம் கிடைக்கும். டயர் கம்பெனிக்காரர்கள் சற்று கூடுதலான லாபத்தை அடைவார்கள். இரசாயனத் தொழில், விவசாயம் இவைகள் சம்பந்தப்பட்டவர்கள் சாதகமான சூழ்நிலையில் இருப்பார்கள். எவரிடமும் யதார்த்தமாக மனம் திறந்து பேச வேண்டாம். ஏற்ற தேதிகள் — 5, 6, 14, 16, 17, 26. சனிக்கிழமை, வியாழக்கிழமை ஏற்ற நாட்கள்.

---

**உளுந்து வடை செய்யும் பொழுது, மாவில் சிறிது சேமியாவைத் தூள் செய்து போட்டுக் கலந்து வடை செய்து பாருங்கள். வடை மொறுமொறுவென சுவையாகவும் இருக்கும்.**

— பாலா.

---

ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லை.

## பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.

**நேச்சுரல்**
—மாநிற
மேனியருக்கு




**லைட்**
— சிகப்பு
மேனியருக்கு




**கோல்டு**
—கருவண்ண
மேனியருக்கு




லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சுரல், லைட், கோல்டு. இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன்—தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக

# லக்மே
# கேலமைன்

சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ்வண்ணம்.

பிறந்த தேதி 9, 18, 27
கூட்டு எண். 9.

உங்களுக்கு வெற்றியைத் தரும் மாதம். எனினும் மாதப் பிற்பகுதி விரயத்தைத் தரும். அது சுப விரயமாக இருக்கும். புது திட்டங்கள் உருவாக்க ஏற்ற மாதம். உங்கள் வீட்டில் நடக்கும் சுப நிகழ்ச்சிக்கு வருபவர்களில் ஒருவரால் திடீர் நன்மை ஏற்படும். சிவப்பு நிறமான, 27 வயதுடைய பெண் ஒருவரால் உங்களுக்கு ஒரு நன்மை ஏற்பட இருக்கிறது. உங்கள் முதுகில் உள்ள மச்சத்தால் ஒரு எதிர்பாராத நன்மை வரக் காத்திருக்கிறது. அதன் பலனை மார்ச் இறுதிக்குள் அடைவீர்கள். உங்கள் உள் மனத்திலிருந்து உருவாகும் எந்தத் திட்டமும் முருகனது அருளைப் பெற உள்ளதால் உங்கள் மனச்சாட்சிப்படி அல்லது 'இப்படி நடக்கலாம்' என எண்ணி செய்யும் எந்தச் செயலும் நிச்சயம் வெற்றி பெறும். சகுனங்கள் பலனளிக்கும். இஷ்ட தெய்வத்தின் அருள் உங்களை வெற்றிப் பாதையில் நடத்திச் செல்லும். ஏற்ற தேதிகள் 9, 6, 3. ஏற்ற நாட்கள் வெள்ளி, வியாழன்.

பெண்களுக்கான கைரேகை



# பெண்களுக்கு சுக்கிர மேடு!

பல சகோதரிகள் மேடுகளைப் பற்றியும் அதன் மீதுள்ள கோடுகளைப் பற்றியும் சற்று விளக்கமாகத் தனித்தனியே எழுதினால் புரிந்து கொள்ள வாய்ப்பாக இருக்கும் என நேரிலும் தபால் மூலமும் கேட்டிருக்கிறார்கள். எனவே இனி அவைகளைப் பற்றி தனித்தனியே விளக்கமாக எழுதப்படும். உங்களது இடக்கையையும் படத்தில் உள்ள வடிவத்தையும் நன்கு ஒப்பிட்டுப் பார்க்கவும். பெண்களுக்கு என இதுவரை தனியாக கைரேகைக் கலையை விளக்கி கூறியதில்லை என்பதையும் கவனத்தில் கொண்டு படத்துடன் கையை ஒப்பிட்டுப் பார்த்தால் பல விஷயங்கள் எளிதில் புரியும்.

கையில் உள்ள மேடுகள் ஏழு என ஏற்கனவே எழுதப்பட்டுள்ளது. ஜாதகக் கட்டங்களிலும் 7 கிரகங்களுக்கு மட்டுமே இராசிகள் ஒதுக்கப்பட்டுள்ளன. சூரியன், குரு, சுக்கிரன், சந்திரன், புதன், செவ்வாய், சனி என ஏழு முக்கிய கிரகங்கள். ராகு கேதுவுக்கு தனியாக இடம் ஒதுக்கப்படவில்லை. படத்தில் மேடுகள் குறிக்கப்பட்டுள்ளதை நன்கு கவனித்து கையில் அவை எங்குள்ளன என்பதையும் கவனிக்கவும். குருமேடு என்பது ஆள்காட்டி விரலுக்கு அடியிலும், சுக்கிரமேடு கட்டை விரலுக்கு அடியிலும் உள்ளன.

சுக்கிரமேட்டைக் கொண்டு ஒருவருக்கு அமையும் குடும்ப நிலை, தாம்பத்திய வாழ்க்கை, வீடு கட்டுதல், வாங்குதல், ஜனன உறுப்புகளின் நிலை, சுகதுக்கங்கள் இவைகளைப் பற்றி நன்கு அறியலாம். சுக்கிரமேட்டின் மீது நீண்ட கோடுகள் இருந்தால் கூடப் பிறந்தவர்கள் உண்டு என்பதைத் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் உண்டா, எத்தனை என்பதை கட்டை விரலுக்கு அடியில் சுக்கிரமேடு சேரும் இடத்தில் உள்ள (சி) சங்கிலி போன்ற ரேகைகள் மூலம் அறிந்து கொள்ள முடியும்.

நமது வாழ்க்கையில் ஏற்படும் ஆசாபாசங்கள், இன்பதுன்பங்கள், அமைதியான தாம்பத்திய வாழ்வு, கணவன் மனைவியிடையேயுள்ள அந்நியோன்யம், பிணக்குகள், விவாகரத்து இவை போன்ற பல விஷயங்களை அறிந்து கொள்ள முடியும். இவைகளை ஒவ்வொன்றாகப் பார்த்து புரிந்து கொள்ளும் வகையில் இனி தொடர்ந்து விளக்கம் அளிக்கப்படும்.

சுக்கிரமேடு நன்கு உப்பலாக, ரோஜா நிறத்தில் இருந்தால் கண்நிறைந்த கணவன் கிடைப்பார். அழகாக கோலம் போடுதல், சித்திரம் வரைதல், இசை, இலக்கிய ஈடுபாடு மற்றும் வீட்டை அழகாக வைத்துக் கொள்ளுதல் போன்ற நிலை ஏற்படும். கணவன் மனைவி உறவு நன்கு அமைவதுபோலவே மாமியார் மருமகள் உறவும் இணைந்து காணப்படும். பொன் ஆபரணங்கள் அணிந்து கொள்ளும் பாக்கியங்கள் ஏற்படும்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.

# தெற்கு தில்லி எண்ணெய் கிளப்!

**எ**திர் வீட்டில் புதிதாகக் குடிவந்திருக்கும் அம்மாள் தன்னை அறிமுகம்செய்து கொண்டவாறு, கனகாரியமாக எங்கள் வீட்டிற்கு வருகை தந்தார். வீட்டிற்குள் நுழைந்ததும், நுழையாததுமாக.

"உங்க வீட்டில் எந்தக் கடையிலிருந்து எண்ணெய் வாங்கறீங்க?" என்று அந்த அம்மாள் நீட்டி முழக்கியதும் எனக்குக் கெட்ட கோபம் வ்ந்தது. என்னுடைய சரீரத்தைப் பார்த்து விட்டு "எந்தக் கடையில் அரிசி வாங்கறீங்க?" என்று கேட்பதற்கு பதில் இப்படி மாற்றி கேட்கும் அந்த அம்மாளை முறைத்துப் பார்த்தேன்.

"வேலைக்காரனை அனுப்பி பக்கத்து கடையிலிருந்து ஒரு லிட்டர் எண்ணெய் வாங்கி வரச் சொன்னேன். பார்த்தால் ஒரு கரப்பான் பூச்சி மிதக்கிறது. இதற்குத்தான் நான் லூஸா எண்ணெயே வாங்க மாட்டேன். நாங்க லக்னோவில் இருந்த பொழுது சீல் வைத்த பெரிய டின்னாக வாங்கி நாலைந்து குடும்பங்கள் பங்கு வைத்துக் கொள்வோம்" என்று ஒரே மூச்சாகப் பேசி முடித்தார் அந்த அம்மாள்.

போருக்குத் தயாராக இருந்த நான், அந்த அம்மாளின் சிநேக பாவத்தைப் புரிந்து கொண்டு "அடாடா! நீங்க சொல்றது நல்ல ஐடியாதான்! சீல் டின்னாக வாங்கினால் எண்ணெயும் சுத்தமாக இருக்கும். விலையும் மலிவு. அளவும் குறையாது. நாமும் அடுத்த மாதத்திலிருந்து டின் வாங்க ஆரம்பிக்கலாம்" என்று உற்சாகமாகப் பேசினேன்.

இப்படித்தான் ஆரம்பித்தது 'தெற்கு தில்லி எண்ணெய் கிளப்! இரண்டு வீடு தள்ளி குடியிருக்கும் சந்திரா, அந்தத் தெருவிலேயே வயதான மங்களம் மாமி, அடுத்த தெருவில் வசிக்கும் கமலா, புதிதாகக் குடி வந்துள்ள காமாட்சியம்மாள் எல்லோரையும் மெம்பர்களாக சேர்த்துக் கொண்டோம். கிளப்பின் முதல் மீட்டிங் எங்கள் வீட்டில் ஒரு திங்கட்கிழமையன்று கூடுவது என்று தீர்மானம் ஆயிற்று.

ரமாமணி சுந்தர்

அவ்வளவுதான்! அன்று காலையிலிருந்தே எங்கள் வீடு அமர்க்களப்பட்டது. அவசர அவசரமாக குழந்தைகளை பள்ளிக் கூடம் அனுப்பி, கணவருக்கும் 'டாடா' காண்பித்து விட்டு, நாலு பேர்கள் வரும் பொழுது வீடு பார்வையாக இருக்க வேண்டாமோ என்று விழுந்து விழுந்து வீட்டை ஒழித்து வைத்தேன். பீரோவை அலசி ஆராய்ந்து நல்ல புடைவையாகத் தேர்ந்தெடுத்து உடுத்திக் கொண்டேன்.



பதினோறு மணிக்கு மீட்டிங் என்று நேரம் கொடுத்திருந்தும் இந்திய சம்பிரதாயப்படி ஒவ்வொருவராக வந்து மீட்டிங் ஆரம்பிப்பதற்குள் மணி பன்னிரெண்டு ஆகி விட்டது. முதல் ஒரு மணி நேரமும் எண்ணெயைத் தவிர மற்ற எல்லா விஷயங்களைப் பற்றியும், குறிப்பாக அன்றைக்கு அவரவர்கள் வீட்டுச் சமையல், உடுத்திக் கொண்டிருந்த புடைவைகளின் விலை, எந்தக் கடையில் வாங்கியது, தற்சமயம் எந்தெந்த புடைவைக் கடை, பாத்திரக் கடைகளில் தள்ளுபடி இருக்கிறது என்று அலசிய பிறகு, பேச்சு ஒரு வழியாக எண்ணெயின் பக்கம் திரும்பியது.

மாதத்திற்கு ஒரு முறை ஒரு டின் நல்லெண்ணெயும், ஒரு டின் கடலெண்ணெயும் வாங்குவது என்று தீர்மானம் ஆயிற்று. மாதத்தின் முதல் வெள்ளிக் கிழமையன்று எண்ணெய் வாங்கலாம் என்று நான் சொன்னதும் தான், தாமதம் மங்களம் மாமி, "நன்னாத்தான் வெள்ளிக் கிழமையும், அதுவுமாக எ ண் ணெ ய் வாங்கினேன்? வீட்டிற்கு ஆகவே ஆகாது" என்று ஓர் அதட்டுப் போட்டாள். தனக்கும் சாஸ்திரம், சம்பிரதாயம் எல்லாம் தெரியும் என்று காண்பித்துக் கொள்வதற்காக உடனே கமலா,

"சனிக்கிழமைதான் ஆகாது என்று சொல்வார்கள். நீங்க சொல்றது அதிசயமாத்தான் இருக்கு!" என்று அடித்துப் பேசினாள்.

இப்படியாக ஐந்து பேரும் ஐந்து கிழமைகள் ஆகாது என்று சொல்ல, மீந்தி இருந்த இரண்டு கிழமைகளில் ஒன்று 'ஆகி' வந்த நாளாக தேர்ந்தெடுக்கப்பட்டது.



சந்திராவோ புதிய யோசனை ஒன்றை எடுத்து விட்டாளே பார்க்க வேண்டும். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது!

"ஏன் எண்ணெய் மட்டும் வாங்கணும்? பேசாமல் மண்டியிலிருந்து அரிசி, துவரம் பருப்பு, உளுத்தம் பருப்பு என்று இன்னும் சில சாமான்கள் கூட 'மொத்தமாக வாங்கி பங்கு வைத்துக் கொள்ளலாமே?" இன்னும் கொஞ்ச நேரம் போனால் இவர்கள் என் வீட்டை மளிகைக் கடையாகவே மாற்றி விடப் போகிறார்களே என்று பயந்து நடுங்கிப் போன நான், அவசர அவசரமாக எல்லோரையும் வெற்றிலை பாக்கு கொடுத்து வழியனுப்பி வைத்தேன்.

எண்ணெய் டின்கள் வாங்குவதற்கு முதல் நாள் ஒரு 'எமர்ஜன்ஸி மீட்டிங்' கூட்டும்படி ஆகிவிட்டது. படபடவென்று என் வீட்டுக் கதவைத் தட்டிய கமலா,

"எந்தக் கடையிலிருந்து எண்ணெய் வாங்கப் போகிறேள்? ஐந்தாறு கடைகளில் விலை விசாரித்துக் கொண்டு, யார் எல்லோரையும் விட குறைவான கொடேஷன் கொடுக்கிறாரோ, அந்தக் கடையிலிருந்து தான் டின்கள் தருவிக்க வேண்டும்' என்று தன் கணவர் பர்சேஸ் டிபார்ட்மெண்டில் இருக்கும் அனுபவத்தில் ஆலோசனை கூறினாள்.

வீட்டில் தொலைபேசியுள்ள ஒரே மெம்பரான சந்திராவின் வீட்டை நோக்கி எல்லோரும் படையெடுத்தோம். கையில் நோட்டுப் புத்தகமும், பென்சிலும் தயாராக வைத்துக் கொண்டு, வெவ்வேறு கடைகளின் எண்களைச் சுழற்றினோம். 'ராங்' நம்பர்களையும் சேர்த்து சுமார் இருபது கால்களுக்குக் குறைவில்லாமல் ஆகியிருக்கும். சொந்தச் செலவில் தொலைபேசி வைத்திருக்கும் சந்திராவுக்கோ, நாங்கள் ஒவ்வொரு எண்ணைச் சுழற்றும் பொழுதும் பகீர் பகீர் என்று வயிற்றைக் கலக்கியது! இருபது கால்கள் என்றால் சும்மாவா? என்ன செலவு ஆச்சு! கடைசியில் பொறுக்க முடியாமல், இந்தப் ஃபோன் செலவை எல்லா மெம்பர்களும் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று முணுமுணுத்தாள்.

அடாடா! அரசாங்க ஃபோன் உள்ள யாரையாவது மெம்பராகச் சேர்த்துக் கொள்ளாமல் போய் விட்டோமே! ஆபீஸ் தொலைபேசி என்றால் உள்ளூர் கடைகள் என்ன, எஸ்.டி.டி. போட்டு கல்கத்தா, பம்பாய், சென்னை கடைகளின் விலைவாசி நிலவரத்தைக் கூட கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே? என்று அங்கலாய்த்துக் கொண்டோம்.

எண்ணெய் வாங்கும் நாளும் வந்தது! எல்லா மெம்பர்களும் எண்ணெய் வாங்குவதற்காக வெவ்வேறு விதமான டிசைன்களிலும், அளவுகளிலும் எவர்சில்வர் தூக்குகளுடன் வந்து சேர்ந்தார்கள். எங்கள் வீட்டுக் கூடம் எவர்சில்வர் பாத்திரக் கடையாகக் காட்சியளித்தது.

கடைப்பையன் இரண்டு டின்களைக் கொண்டு வந்து இறக்கினான். பதினைந்து லிட்டர் டின்களைப் பார்த்த உடன், எல்லா மெம்பர்களும் எங்கே தாங்கள் இந்த டின்னைத் தூக்கி எல்லா பாத்திரங்களிலும் அளந்துவிட வேண்டி வருமோ என்று பயந்து விட்டார்கள்.

வயதான அம்மாள் என்பதால் முதலில் தப்பித்துக் கொண்டவர் மங்களம் மாமி.

"எனக்கு ஸ்பாண்டிலைட்டிஸ் டிரபிள். துளிக்கூட கனமே தூக்கக் கூடாது என்று டாக்டர் சொல்லியிருக்கிறார்" என்று முக்கி முனகினாள் சந்திரா.

"அதையேன் கேட்கிறீங்க! எனக்கு ரமேஷ் பிறந்ததிலிருந்தே இடுப்பில் பலமே கிடையாது! கனமே தூக்க முடியவில்லை!" என்று பரதநாட்டியம் ஆடுபவள் போல் இடுப்பில் கை வைத்து, பதிலுக்கு வியாதி கொண்டாடிக் கொண்டாள் கமலா.

இப்படியே ஒவ்வொருவராகப் புதுப் புது வியாதியாகச் சொல்லி தப்பித்துக் கொள்ள, கடைப் பையனையே எல்லோருடைய பாத்திரங்களிலும் அளந்து விடும்படி கேட்டுக் கொள்ளப்பட்டது. அவனும் வேறு வழியில்லாது அரை மனத்துடன் தலையாட்டினான்.

அடுத்த கேள்வி தலைக்கு எவ்வளவு எண்ணெய் வேண்டும் என்பது!

"எனக்கு ஒரு லிட்டர் நல்லெண்ணெய், ஒரு லிட்டர் கடலெண்ணெய் போதும்" என்று அறிவித்தாள் சந்திரா.

"அதெப்படி மாதம் முழுவதற்கும் ஒரு லிட்டர் எண்ணெய் போதும்! ஆனாலும் சந்திரா ரொம்ப சிக்கனம்தான். எனக்கு இரண்டு எண்ணெயும் நாலு லிட்டர் வேணும். எங்க வீட்டுக்காரர் தினம் பொரித்த அப்பளம் இல்லாமல் சாப்பிட மாட்டார். கறியெல்லாம் முறுமுறுவென்று ரோஸ்ட் பண்ணலையென்றால் தட்டைத் தூக்கி எறிந்து விடுவார்" என்று தன் வீட்டுச் சமையலைப் பற்றி பெருமை பீற்றிக் கொண்டாள் கமலா.

தன்னை சிக்கனம் பிடித்தவள் என்று கமலா பேசியதைப் பொறுக்க முடியாமல்,

"ரொம்ப எண்ணெய் சாப்பிட்டால் உடம்பு பூதமாகப் பெருத்துப் போகும்" என்று சந்திரா தான் ஒல்லியாக ஒடிய ஒடிய இருக்கும் பெருமையில் இரட்டை நாடியான கமலாவை, இதுதான் சாக்கு என்று மட்டம் தட்டினாள்.

பருத்த சரீரமான எனக்கும் சந்திராவின் கிண்டல் பேச்சு உறுத்தினாலும், எங்கே மகா பாரதப் போரே உண்டாகிவிடப் போகிறதே என்ற கவலையில்,

என்னதான் ஜாக்கிரதையாக இருந்தாலும் அடுப்புத் தீயில் சூடு போட்டுக் கொள்வது சில பெண்களின் (அஜாக்கிரதை) வழக்கம். உடனே கவலையின்றி (உணவு) சோடா உப்பைத் தூவுங்கள். எரிச்சல் 'கப்'பென்று அடங்கும்.

— சித்ரா.

"அதற்கில்லை. ரொம்ப எண்ணெய் சாப்பிட்டால் கொலஸ்ட்ரால் டிரபிள், ஹார்ட் அட்டாக் எல்லாம் வரும்" என்று சமாதானமாக ஏதோ சொல்லி வைத்தேன். உடனே பிடித்துக் கொண்டு விட்டார்கள், மங்களம் மாமியும், காமாட்சியம்மாளும்.

"என்னவோ இந்தக் காலத்தில்தான் அதிசயமாக இருக்கு! கொலஸ்ட்ராலும், கிலஸ்ட்ராலும்! எங்க காலத்தில் கைநிறைய நல்ல நெய்யை விட்டுக் கொண்டு குடிப்பார்கள். எல்லோரும் நல்லாத்தான் இருந்தார்கள். இந்தக் காலத்து மனிதர்களைத்தான் வியாதியும், வெக்கையும் பிடுங்கித் திங்கறது"

"என் கல்யாணத்தில் எல்லா இனிப்பு பட்சணங்களும் நல்ல நெய்யில்தான். நடேசய்யர் வீட்டுக் கல்யாணம் என்றால் அந்த பட்சணத்துக்கு ஈடு, இணை உண்டோ என்று ஊரே பேசும்" என்று சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் ஏதோ பேசிக் கொண்டே போனார்கள்.

பொறுமையிழந்து போன கடைப்பையன் "சீக்கிரமா சொல்லுங்க எவ்வளவு எவ்வளவு அளக்கணும் என்று! எனக்கு இன்னும் நாலு வீடுகளுக்கு சாமான் சப்ளை பண்ணணும்" என்று ஒரேயடியாகக் கூச்சல் போட ஆரம்பித்தான்.

யார் யாருக்கு எவ்வளவு எண்ணெய் என்று ஒரு வழியாகத் தீர்மானம் ஆயிற்று.

எண்ணெய் டின்களின் சீல்கள், அக்மார்க் முத்திரை எல்லாம் சரியாக இருக்கிறதா என்று எல்லா மெம்பர்களும் கவனமாகப் பார்த்த பிறகு, எங்கள் வீட்டு வழக்கப்படி கத்தியை வீடு முழுவதும் தேடிக் கண்டுபிடித்து டின்களின் சீல்கள் உடைக்கப்பட்டன.

முதலில் எண்ணெயை, ஒரு பெரிய அண்டாவில் கொட்டினான் கடைப் பையன். தன் வீட்டுத் தண்ணீர் குவளை சரியாக ஒரு லிட்டர் பிடிக்கும், என்று கமலா அடித்துச் சொன்னதன் பேரில், அக்குவளையினால் மொண்டு மொண்டு எல்லா தூக்குகளிலும் விடுமாறு கடைப் பையனைப் பணித்தோம். தரையில் எண்ணெய் சிந்தாமல் இருக்க தாம்பாளம் ஒன்றும் வைக்கப்பட்டது.

எண்ணெய் அளக்கும் பொழுது கமலாவும், சந்திராவும் இங்கிலீஷில் பேசிக் கொள்ளவே, மங்களம் மாமிக்கு தன்னை இவர்கள் ஏமாற்றுகிறார்களோ என்று சந்தேகம் வந்து விட்டது. எண்ணெய் கிளப்பில் தமிழில் தான் உரையாட வேண்டும் என்று சட்டம் கொண்டு வராமல் போனேமே என்று வருத்தப்பட்டுக் கொண்டார்!

காலியான டின்களை எடுத்துக் கொண்டு புறப்பட்ட கடைப் பையன், ஆட்டோக்காரன் தோரணையில்,

"ஒரு மணி நேரம் வெயிட்டிங் ஆகிவிட்டது. மேலே போட்டுக் கொடுங்கள்" என்று கோரிக்கை விடுத்தான். ஐந்து பேர்களுக்கு அளந்து விட்டதற்கு ஐந்து ரூபாயாவது டிப்ஸ் கொடுத்தால்தான் ஆச்சு என்று அடித்துப் பிடித்து வாங்கிக் கொண்டு போய் விட்டான்.

"இது வேறு தண்டச் செலவா! சுண்டைக்காய் கால் பணம்; சுமை கூலி முக்கால் பணம்" என்று முணுமுணுத்தவாறு கிளம்பிப் போனார் மங்களம் மாமி. ஆபிசிலிருந்து வந்து நாட்டுப் பெண் கணக்குக் கேட்டால் என்ன பதில் சொல்வது என்ற கவலை அவருக்கு!

கருமித்தனத்திற்கு பெயர் போன சந்திராவுக்கோ ஃபோனுக்கு ஏகப்பட்ட பணம் செலவழிந்து விட்டது என்று ஏற்கெனவே குறை. கமலா வேறு எரியும் நெருப்பில் எண்ணெயை வார்த்தார்ப் போல்,

"கடையில் நாலு லிட்டர் வாங்கினால், இந்தத் தூக்கு வழிய வழிய வரும். இங்கு அளவு ரொம்ப குறைகிறது!" என்று சந்திராவை கிளப்பி விட்டு, இருவருமாக மூக்கால் அழுதுகொண்டே போய்ச் சேர்ந்தார்கள்.

வீட்டுக் கூடத்தைப் பார்த்தேன். தலையைச் சுற்றிக் கொண்டு வந்தது எனக்கு! அண்டா, குவளை, தாம்பாளம், கடைசியாக கொசுறு அளந்து விட்ட கரண்டி, என்று ஏகப்பட்ட எண்ணெய் பாத்திரங்கள். கூடம் முழுவதும் திட்டுதிட்டாக எண்ணெய் குளம்!

> வயது நாற்பதா? லேசான தலைசுற்றல் வரும். இதைத் தடுக்க பாட்டிமார்கள் வைத்தியம்—"கொத்தமல்லி வைத்தியம்" என்றே பெயர்.
>
> சந்தனம், கொத்தமல்லி விதை, நெல்லி வற்றல் மூன்றையும் சம அளவு சேர்த்து இரவில் ஊறவைத்து காலையில் வெறும் வயிற்றில் ஒரு அவுன்ஸ் குடித்தால் தலை சுற்றல் நிற்கும். அபாயமில்லாத பலன் கொடுக்கும் என்பது பாட்டிமார்களின் கணக்கு.
>
> — சித்ரா.

"கொஞ்சம் இந்தப் பாத்திரங்களை அலம்பி வைத்து கூடத்தையும் சோப்புப் போட்டு கழுவி விடுகிறாயா?" என்று நான் கேட்டதும் தான் தாமதம், அதுவரை எண்ணெய் அளக்கும் வைபவத்தை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த முனியம்மா,

"எனக்கு எம்மா வேலை கிடக்கு! என்னாலே ஆகாது இந்த எண்ணெய் பிசுக்கையெல்லாம் களுவ!" என்று அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள்.

இன்னும் கொஞ்ச நேரம் தாமதித்தால் எங்கே தான் பாத்திரங்களைத் துலக்க வேண்டி வந்து விடுமோ என்று பயந்த காமாட்சியம்மாளும் அங்கிருந்து நைஸாக நழுவினார்.

நான் அப்படியே தலையில் கை வைத்து உட்கார்ந்து விட்டேன்! சரியான சமயத்தில் என்னுடைய பெண்கள் இருவரும் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்தார்கள். மடமடவென்று அவர்கள் இருவரையும் உட்கார்த்தி, எண்ணெயெல்லாம் வீணடிக்காமல், எல்லா பாத்திரங்களையும் வழித்தெடுத்து தலைக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டினேன். அப்படியே எண்ணெய் கிளப்பிற்கும் தலை முழுகினேன்!

# ஜீவநதிகள் 10

நீரஜாவும், பிரகாஷும் தேனிலவு முடிந்து வந்தாயிற்று. தங்கைகளுக்கும், அண்ணாவிற்கும் என்னென்னமோ ஃபேன்ஸி சாமான்கள் வாங்கி வந்திருந்தாள். நாத்தனார்களுக்கும், மாமியாருக்கும் கூட வாங்கி வந்தாளாம். அவர்களுக்கு அவ்வளவு சந்தோஷமாம். சொன்னாள்.

பிரகாஷ் எப்போதும் போல் காமாட்சியுடனும், பிரபுவுடனும் பேசி நடந்து கொண்டான். ஆனால் வர, வர நீரஜாவின் முகம் தான் அவ்வளவாக சுரத்தாய் இல்லாதது போல் தோன்றியது காமாட்சிக்கு.

''நாள் தள்ளிப் போயிருக்குமா? இல்லை வேறே என்ன சங்கடமாயிருக்கும். இப்படி கலகலப்பேயில்லாம இருக்காளே, கேக்கலாமா?''

'ம்...ஹூம், வேண்டாம். பொறுப்போம். சரக்கு மலிஞ்சா கடைக்குத் தானா வரது.'

அந்த சரக்கு மலிந்து கடைக்கு வர இரண்டு மாதங்களுக்கு மேலேயே ஆயிற்று.

எப்போதும் போல் பிரகாஷும், நீரஜா



வும் ஸ்கூட்டரில் வந்தார்கள். ஆனால் இந்த முறை அவள் ஒரு பையில் புடவைகள், பெட்டிகோட், ரவிக்கை, பாடி என்று இரண்டு மூன்று ஸெட் துணிகளுடன் வந்திருந்தாள்.

ஓஹோ! மூட்டை முடிச்சுடன் வந்திருக்காளா. அப்போ குறைந்த பட்சம் மூன்று, நான்கு நாட்களாவது இங்கே தங்கறுப்பல வந்துருக்கா போலிருக்கு. இத்தனை நாட்கள் மூஞ்சிய மட்டும் தூக்கிண்டு வந்துண்டிருந்தா. இப்போ பையையும் தூக்கிண்டு வந்திருக்கா. அப்போ என்னமோ தீவிரமா நடக்கறது போல இருக்கு. அவசரப்படாம, நிதானமா நடந்துக்கணும்.

''வாப்பா பிரகாஷ், வாம்மா நீரு...''

''பாட்டி, நீருவுக்கு ஒரு செஞ்சுக்காக இங்க வரணும்னு.. அதான், அம்மாட்டையும் சொல்லிட்டு, கொண்டு விடலாம்னு வந்தேன்...''

''சந்தோஷம்பா. ஏதாவது விசேஷமா விஷயம் உண்டான்ன...''

''அப்படில்லாம் ஒண்ணுமில்லே பாட்டி. சும்மாதான்.....'' வெட்கத்துடன், சிரித்துக் கொண்டே பதில் கூறினான் பிரகாஷ்.

''ராத்திரி சாப்டுட்டு போலாம் பிரகாஷ். இதோ, பிரபு வர சமயமும் ஆச்சு. காபி கலக்கட்டுமா....''

''பாட்டி, காபி, டிபன்லாம் சாப்டுட்டுத் தான் வந்தேன். இப்ப ஒண்ணும் வேண்டாம் பாட்டி. நீங்க சொல்றுப்புல சாப்டுட்டுப் போறேன். ரொம்ப நாளாச்சு உங்க கையால சாப்ட்டு. அம்மாவுக்கு ஃபோன் பண்ணி சொல்லிடறேன் பாட்டி இங்கேயே சாப்டுட்டு வறேன்னு...!''

சிரித்தபடியே சமையலறையினுள் நுழைந்தாள் காமாட்சி. என்ன ஒரு தங்கமான பிள்ளை. கொஞ்சம் கூட மாப்பிள்ளைன்னு அலட்டல் இல்லாம, இந்த வீட்லயே பொறந்து வளந்தவன் மாதிரி, சகஜமா, ஒத்தாப்புல நடந்துக்கறான். இதெல்லாம் பிறவியிலேயே வர்ற குணம். சொல்லிக் கொடுத்தா வந்துடுமா? நல்லா தீர்க்காயுசா இருக்கட்டும்...

''என்ன சமைக்கட்டும்...

ஃப்ரிட்ஜை திறந்து பார்த்தாள். சௌசௌவும், பீன்ஸும் இருந்தன. வெளியே உருளைக்கிழங்கும், வெங்காயமும் இருந்தன.

தோட்டத்திலிருந்து முருங்கைக்காய் பறித்துத் தரச் சொல்லி வேடியப்பனுக்கு உத்தரவிட்டாள்.

மனசில் மெனு தயாராகியது. முருங்கைக்காய் சாம்பார், உருளைக்கிழங்கும் வெங்காயமும் சேர்த்து ஒரு கறி, பீன்ஸ் தேங்காய் போட்ட கறி, சௌ சௌ பொரிச்ச கூட்டு, அரிசி அப்பளம், வடாம் பொரிப்பதற்கு, ஒரு பாயசம்; ரசம்.

மளமளவென்று காரியத்தில் இறங்கினாள்.

வனஜா, காமாட்சி கூப்பிடாமலேயே உதவிக்கு வந்தாள். ''ஏதாவது முக்கியமா படிக்கணும்னா படிச்சுக்கோம்மா. எனக்கு ஒண்ணும் சிரமமில்லே வனி.''

''பாட்டி, நீ எட்டுருக்கு எல்லாம் செய்வேன்னு எனக்கு நல்லாத் தெரியும். இருந்தாலும் ஏதோ நம்மால ஆனது, ராமனுக்கு அணில் செஞ்ச மாதிரி செஞ்சா, அவர் முதுகுல தடவி, அந்த மூணு பட்டையான கோடு கிடைச்சாப்பல, எனக்கும் ஒரு மூணு பட்டை செயினுக்குப் பதிலா, ஒரு ஒத்த இழை செயினாவது அதிகமா கிடைக்காதாங்கற ஆசைதான். இந்த ஆசை யாரை விட்டது சொல்லு பாட்டி...

''அடி சக்கைன்னானும். அதுதானே என்னடாது பிரமாதமா சமையலுள்ளே நுழைஞ்சாறதுன்னு. அணிலுக்கு முதுகுல மூணு பட்டை கிடைச்சதுன்னா, உனக்கு நெத்தியில மூணு பட்டை போட்டுட்டாப் போச்சு. ரொம்ப சுலபம். என்ன சொல்றே?''

இருவரும் சேர்ந்து சிரித்தார்கள்.

பாட்டியும், பேத்தியுமாக இல்லாமல், மனம் ஒருங்கிணைந்த இரு சிநேகிதிகள் போல், வயதின் வித்தியாசம் பாதிக்காமல் கலகலப்புடன் சமையல் நடந்து கொண்டிருந்தது.

கூடத்தில் உட்கார்ந்து புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த பிரகாஷும் வியந்து, சிலிர்த்துத்தான் போனான்.

பாட்டி! எப்படித்தான் உங்களால இப்படி சின்னக் குழந்தையிலேருந்து, பெரியவா வரை மனசைக் கவர்ந்துட முடியறதோ? அப்படி ஒரு இணக்கம் உங்க கூடவே பொறந்து டுத்தா? உங்களோட அந்த இங்கிதத்தை நெனைச்சு, நெனைச்சு நெஞ்சு நிறைஞ்சுபோன தாலதான், உங்க பேத்தியைக் கல்யாணம் பண்ணிக்க என் மனசு ரொம்பவுமே ஆசைப் பட்டுது பாட்டி. ஆனா... இப்போ...

ம்.... நீங்க எப்படியாவது சரி செஞ்சுடு



சியாமளா ராவ்

வேல் அப்பமங்கற நம்பிக்கையிலதான் இங்கே விட்டுட்டுப் போறேன். நீங்கதான் தெய்வமாட்டமா இருந்து எல்லாம் சரி பண்ணனும்...

உள்ளுக்குள்ளேயே, பாட்டியைக் கண்கள் பார்த்தபடி இருக்க, மனமார வேண்டிக் கொண்டான்.

பிரபு வந்ததும், இருவரும் பேசிக் கொண்டே சாப்பாட்டை முடித்தனர். அனைவரிடமும், விடைபெற்றுக் கொண்டான்.

நீரஜா அவனுடனேயே வாசல் வரை வந்தாள். கிரீம்பவுண்ட் கேட்டின் மேல் பதிந்திருந்த நீரஜாவின் கைகளின் மேல் தன் கைகளை வைத்த பிரகாஷ், "வரட்டுமா நீரு" என்றான்.

'ம்....' எனத் தலையை அசைத்த நீரஜாவின் கண்களும் கலங்கி, உதடுகள் துடித்தன.

பிரகாஷ் சென்றதும் உள்ளே வந்தாள். நேராக மாடியை நோக்கிச் சென்றாள். வனஜாவிற்கு நன்றாகவே புரிந்தது நீரஜா ஏதோ மன உளைச்சலுடன் வந்திருக்கிறாள் என்று. ஜலஜாவிற்குப் புரிந்தும், புரியாததுமான ஒரு இரண்டுங் கெட்டான் நிலைமை. ஆனால் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம், மனத்தில் உந்தி நின்றது. ஆனால் கிரிஜாவிற்கு, இதிலெல்லாம் அக்கறையுமில்லை. ஆர்வமுமில்லை. அதற்கான வயதுமில்லை.

> முதல் நாள் மீதமான அடைமாவை மறுநாளும் செய்தால் போர் அடிக்கும். மாறுதலாக அதை இட்லி தட்டில் வேக வைத்து, அரிந்து வேக வைத்த கொத்தவரங்காயுடன் சேர்த்து உசிலி செய்தால் பிரமாதம். புதுமையும் கூட.
>
> — ஆர். பார்வதி.

நீரஜா வந்து விட்டாள். இனிமேல் பின்னிக் கொள்ளவும், பாடங்களைக் கேட்கவும் அவளுக்கு சௌகரியமாயிற்று. இரவில் வனஜாவிடமோ, ஜலஜாவிடமோ படுத்துக் கொண்டால், காலைத் தூக்கி தொம், தொம்மென்று போடுகிறாய், வயசாகவில்லையா, தனியாய்ப் படு என்று கத்துவார்கள். ஆனால் நீரு இருக்கும் மட்டும் அவளுடன்தான் படுத்துக் கொள்வாள். அவள் எதுவும் சொன்னதில்லை. இப்போது அதனால் வேறு ஒரு சந்தோஷம்..

காமாட்சிக்கு, நீரஜா நேரே மாடி சென்று விட்டது, மனத்திற்கு சங்கடமாயிருந்தாலும், பொறுமையாயிருந்தாள். குழந்தைகள் எதிரில் எதுவும் கேட்க வேண்டாம். நாளைக்கு அனைவரும் சென்ற பிறகு ஆகட்டும் என்று விட்டு விட்டாள்.

காலை அவசரங்கள் எல்லாம் முடிந்து விட்டன.

நீரஜா தோட்டத்தை சுற்றி விட்டு வந்தாள். பாட்டி, பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அன்றைய "ஹிண்டு"வைப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

"வாம்மா, நீரு. வேடி தோட்டத்தை நல்லா வச்சண்டிருக்கானு..."

"ம்... பொங்காலியைக் காணமே பாட்டி"

"அவ அம்மா வீட்டுக்கும் போயிருக்கா. இப்படி ஒரு பொண்ணு இருக்குமாடி நீரு. மசக்கையானு மசக்கை. வாந்தி, தலை தூக்க முடியலே. அவளோட அம்மாவும், அப்பாவுமா கூப்புடறா. வேடியும் போய்ட்டு வா புள்ளேங்கறான். இது கேக்கணுமே. புருஷனை விட்டுட்டுப் போகமாட்டாளாம். மாமியாரைக் கூட்டிண்டு வாங்கறா. அவ கொஞ்ச நாள் இங்கே இருக்கட்டும்கறா. மாமியாருக்கும் வரணும்னுதான். பொண்ணுக்கும் மாசமாயிருக்காம். வர முடியலே. அப்புறமா நான் சொல்லி பலவந்தமா அனுப்பி வச்சேன். பதினைஞ்சு நாள் இருந்துட்டு வான்னு. இப்படியும் இருக்கா பொண்கள்..."

"ஆமா. இங்கே தனியா, தன்னிஷ்டமா இருக்கா ராஜாத்தி மாதிரி. அதை வுட்டுட்டுப் போக மனசு வருமான்ன. மாமியாருக்கு இக்கட்டுன்னு தெரிஞ்சுதான் தைரியமா அவளை கூப்பிட்டிருக்கா. படிக்காட்டாலும் நல்ல உலக விவகாரம் தெரிஞ்சவ. கெட்டிக்காரி. ம்"... ...

"என்ன நீரு இப்படி பேசறே?"

"இப்படிப் பேசாம எப்படி பேசறதாம்... எதுக்கெடுத்தாலும் அம்மாகிட்டே சொல்லணும். அப்பாகிட்டே கேக்கணும்னு, சுயமா ஒண்ணும் செய்யத் தெரியாம, அப்பா, அம்மா தலைப்பையே பிடிச்சுத் தொங்கிண்டிருந்தா...."

"யாரைச் சொல்றே நீரு?"

"பாட்டி, ஒண்ணும் புரியாத மாதிரி நடிக்காதே. எல்லாம் இந்த வீட்டு மாப்பிள்ளையைத்தான் சொன்னேன். நேத்து கொண்டு விட்டுட்டுப் போனாரே, அவரைத்தான் சொல்றேன் அம்மாக்கோண்டுன்னு..."

கலகலவென்று சிரித்தாள் காமாட்சி. இனிமேல் 'ஹிண்டு' படிக்க முடியாது. அதிலிருப்பதை விட ஸ்வாரஸ்யமான செய்திகள் பேத்தியின் வாயிலிருந்து வரப் போகிறதே. பேப்பரை மடித்து வைத்து, கண்ணாடியையும் கூட்டிற்குள் வைத்து மூடினாள்.

"ம்... இப்ப சொல்லு. உர்ருனு உக்காந்துக்காதே. இத்தனை நாட்களா இருந்த பேத்தி நீரு. இப்ப மிஸஸ். நீரு பிரகாஷா மாறினப்புறமா, பேச்சும் மாறித்தானே போகும். சொல்லு. கொஞ்சம் அந்த அம்மாக்கோண்டுவைப் பத்தி, நானும் கேக்கறேன்."

"போ பாட்டி. இப்பிடில்லாம் கேலியாப் பேசினா நான் ஒண்ணும் சொல்லலே. மனசு கஷ்டத்தை சொல்லிக்கலாம்னா நீ இந்த மாதிரி சிரிச்சு, கிண்டல் பண்றியே...."

கண்கள், மூக்கு, முகம் அத்தனையும் சிவந்து, உதடுகள் புருபுருத்துத் துடித்தன. அழுகை முட்டி நின்றது நீருவிற்கு.

அவளைத் தன்னுடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள் காமாட்சி. முதுகில் தட்டிக் கொடுத்தாள் ஆறுதலாக.

"பாட்டி, எனக்குத் தனிக் குடித்தனம் போகணும்னு இருக்கு பாட்டி. ஆனா இவர் ஒத்துக்க மாட்டேங்கறார்."

சிக்கனம்!
சிறப்பு அம்சம்!!

# ப்ரீத்தி

ஹெவி டியூடி மிக்ஸர் கிரைண்டருடன்



2 ஸ்டெய்ன்லஸ் ஸ்டீல் ஜாடி
2 வருட உத்திரவாதம்

ரூ. 1249 மட்டுமே

விநியோகஸ்தர்கள் :—
டி.எ. டெய்லர் & கோ (மெட்ராஸ்) பி. லிட்.,
18/19, ஸ்ரீராம் நகர், தெற்கு தெரு, சென்னை-600 018.
Tel: 451709 / 451747 / 450564

ஏதோ ஒரு மிக்ஸி அல்ல—இது ஒரு ttk தயாரிப்பு

"ஏன்? உன் மாமியார் படுத்தறாளா?"

"ம்...ஹாம்! ஆனா எனக்கு ப்ரைவஸியே இல்லே பாட்டி. எப்பப் பாரு ஏதாவது ஒண்ணு. கார்த்தாலே ரெண்டு நாத்தனாருமா, பின்னி விடு மன்னின்னு வரா. இத்தனே இத்தனை தடிமனா... கைக்கே அடங்காம பின்னல். அப்புறமா, இவருக்குக் குளிக்க ஏற்பாடு பண்ணணும்..."

"வெந்நீரடுப்பு மூட்டி செய்யணுமா? அடுப்பு அணைஞ்சுடறதா?"

தயக்கத்துடன் கூறினாள். "இல்லே பாட்டி. கெய்ஸர்தான் போடணும்...., மாமனாரோட பூஜைக்கு எடுத்து வைக்கணும். அந்த ரூமை தொடைச்சு கோலம் போடணும். மூணு பேருக்கும் டிபன் பாக்ஸில், டிபன் போட்டு தயாரா வைக்கணும். சாயந்திரமானா ரெண்டு நாத்தனார்களுக்கும் தெரியாத பாடத்தை சொல்லித் தரணும்...."

"சமைக்கணுமே, மறந்துட்டியே...."

"அதெல்லாம் எங்க மாமியார்தான் செய்வா."

"பின்னே இன்னும் வேறே என்ன...?"

"பாட்டி! எங்கே இவரோட போறதாயிருந்தாலும், அவாம்மாகிட்டே பெர்மிஷன் வாங்கிக்கணும். தடார்னு புறப்பட்டுப் போக முடியாது."

"அதுல என்ன தப்பு நீரு. பிரகாஷ் சரியாத்தான் நடந்துக்கறான். உங்க மாமியார் போகக் கூடாதுன்னு தடை பண்றாளா...."

"இல்லே பாட்டி. ஆனா ஆன்னா, ஊன்னா உக்காறதுக்கும், நிக்கிறதுக்கும் கூட சொல்லிண்டு தான் செய்யணுமான்ன... நாங்க ரெண்டு பேருமா வெளியில ரெண்டு மூணு தரம் போனா, தங்கைகளை கூட்டிண்டும், அப்பா, அம்மாவோடயும் ரெண்டொருதரமாவது போவேண்டியிருக்கு..."

"ரொம்ப ரொம்ப சரி. பிரகாஷ் ரொம்ப நல்லா பேலன்ஸ் பண்ணிண்டு, சமத்தா, பிரமாதமாத்தான் நடந்துக்கறான்னு நினைக்கறேன். ஏன் நீரு, உங்கிட்டேயும் அன்பாத்தான் நடந்துக்கற மாதிரி இருக்கு. இருக்கானா இல்லையா...."

"அதெல்லாம் அன்பாத்தான் இருக்கார். ஆனா, இந்தப் பொங்காலிக்கு இருக்கற சந்தோஷம் கூட எனக்கு இல்லே பாட்டி. டில்லியில போய் பத்துநாளிருந்தோமே. எத்தனை ஜாலியா இருந்துது தெரியுமா? அதைக் கூடச் சொன்னேன். வேறே ஊருக்காவது டிரான்ஸ்ஃபர் வாங்கிக்கோங்கோன்னு. அதுக்கும் மசிய மாட்டேங்கறார். எனக்கு அலுத்துப் போச்சு. அதான் நான் இங்கே கொஞ்ச நாளிருக்கலாம்னு வந்துட்டேன்."

"உங்க மாமியாரிட்டே சொல்லிட்டுத் தானே வந்தே."

"பாட்டி! நான் இத்தனே சொல்லிண்டிருக்கேன். அதையெல்லாம் காதுல போட்டுண்டியா இல்லையான்னே தெரியலே. பிரகாஷ் நல்லாத்தான் பேலன்ஸ் பண்றாங்கறே. மாமியாரிட்டே சொல்லிட்டு வந்தியாங்கறே. அவன் செய்றதுல என்ன தப்புங்கறே... எனக்கு ஒண்ணுமே புரியலே. நீ என்னோட பாட்டிதானேன்னு சந்தேகமாயிருக்கு பாட்டி. யாரோ பெத்த ஆனந்திக்காக கவலைப்படற நீ, என்னோட, உன் பேத்தியோட நிம்மதிக்காக ஒண்ணுமே சொல்லாம இருக்கியே ஏன் பாட்டி?"

கண்கலங்க, ஆத்திரத்துடன் கேட்டாள் அழுகையோடு.

"நீரு! நீ என்னோட அருமை பேத்திதான். இல்லேங்கலே. அதுக்காக நீ சொல்றது, செய்யறது எல்லாமே சரின்னு நான் சொல்ல முடியுமா என்ன...."

"அப்போ நான் எங்காத்துக்காரரோட சந்தோஷமாயிருக்கணும்னு நெனைக்கறது கூட தப்புங்கறியா..."

"அசடே. பிரகாஷோட நீ சந்தோஷமாயிருக்கணும்கறதுக்குத்தானே கல்யாணமே பண்ணி வச்சது. அப்படி நீ நெனைக்கறதுலேயும் தப்பு இல்லேம்மா நீரு. ஆனா அதுக்காக நீ மத்தவாளையெல்லாம் அதுக்குத் தடையாயிருக்கறாப்புல ஒரு பிரமையை வளத்து வைச்சுண்டு மனசைக் குழப்பிண்டிருக்கியே, அதுதான் தப்புன்னு சொல்றேன்."

"பாட்டி......"

"ஆமாம் நீரு. இங்கேயும் வெளியில போனா எங்கிட்டே சொல்லிண்டு தானே போவே. கிரி, ஜலஜாவுக்குப் பின்னின இல்லையா? பூஜைக்கு எனக்குக் காரியம் செய்ததில்லையா...? இதெல்லாம் இங்கே சகஜமானபோது, அங்கே ஏன் உனக்கு தப்பாப் படறது."

இங்கே தினமும் அந்தக் காரியங்களை செஞ்சதில்லே, வாஸ்தவந்தான். அதனாலே அங்கே தினமும் செய்யணுமேன்னு கஷ்டப்படலாமோ? அதுதானே இனிமே உன் வீடு. உன் வீடுன்னு ஆனப்புறமா, வீட்டுக் காரியத்தைப் பொறுப்பா செய்ய வேண்டாமோ? அதைப் பாரமா எப்படி நினைக்கலாம். அந்தாத்துப் புள்ளையான பிரகாஷை மட்டும், உனக்கு சொந்தம்னு, கல்யாணம் பண்ணிண்டதாலே நினைக்கறப்ப, அந்தாத்து மனுஷாளை மட்டும் எப்படி வேத்துமையா நினைக்கத் தோணறது? அதுக்குக் காரணம் உம் மனசுதான். இல்லையா நீரு...?"

"பாட்டி......

(தொடரும்)

---

வீட்டில் 'பார்த்தினியம்' செடிகள் முளைத்தால், அரிப்பு, கொப்பளம், ஜல தோஷம், தும்மல், காய்ச்சல், எக்ஸிமா, பால் கசத்தல் போன்றவைகள் ஏற்படக் காரணமாகின்றது. இளஞ்செடிகளை ஜாக்கிரதையாக வேருடன் அகற்றி உரக் குழியினுள் போட்டு விடுவதால் ஆபத்தில்லை. செடிகளை வெயிலில் காய வைத்தும் எரித்து விடலாம்.

தகவல்: — மதுரை ராஜசேகரன்.



# இவர்களுக்கு என்ன பிரச்னை?

நர்ஸரி எனப்படும் பாலர் பள்ளி முதல் ஆரம்பப் பள்ளி, நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி என்று பல நிலைகளில் பணிபுரியும் ஆசிரியர்கள் என்னென்ன பிரச்னைகளைச் சந்திக்கிறார்கள்? சிலர் பெயரோடு பிரச்னைகளைத் துணிந்து சொன்னார்கள். பலர் பெயரும், பள்ளியும் வேண்டாமே என்று மறுத்துவிட்டு, பிரச்னைகளை மட்டும் கூறினார்கள். ஏனென்றால் எதிர் காலச் சமுதாயத்திற்கே வழிகாட்டியாக விளங்கும் இவர்கள் பள்ளிக்குக் கொத்தடிமைகளாக விளங்குகிறார்களாம்.

## நர்ஸரி பள்ளியில்...

முதலில் நர்ஸரிப் பள்ளியிலிருந்தே தொடங்குவோம். ''நினைத்துக்கூடப் பார்க்க முடியாத இடங்களிலெல்லாம் முளைக்கும் காளான்கள்'' என்று வர்ணிக்கப்படும் இப் பள்ளிகளில் பணிபுரியும் ஆசிரியர்களின் (!?) நிலை மிகவும் பரிதாபத்திற்குரியது.

''ஆரம்பத்தில் ரூ150ம் ஒவ்வொருவருடமும் ரூ10 இன்கிரிமெண்டும் தரும் இப் பள்ளியில் டியூஷன் எடுப்பதையும் கண்டிக்



* ராஜா

கிறார்கள். எல்.கே.ஜி., யு.கே.ஜி. வகுப்புகளில் ஆயா வேறு கிடையாது. இதில் எந்த விழாவானாலும் பள்ளியில் பெருக்க நகர்த்திப் போடுவது முதல் தோரணம் வெட்டி ஒட்டி, குழந்தைகளுக்கு உடை தைத்து, அலங்காரம் செய்து, விழா முடிந்த பின் அனைத்தையும் பழைய நிலையில் வைப்பது வரை எல்லா வேலைகளும் எங்கள் தலையில் தான். எதிர்த்துக் கேட்டால் விருப்பமில்லாவிட்டால் வேலையை விட்டுவிடு என்கிறார்கள்'' இப்படிப் புலம்புபவர் பல ஆண்டுகளாக ஒரு நர்ஸரி பள்ளியில் எல்.கே.ஜி. வகுப்பு ஆசிரியையாகப் பணிபுரியும் திருமதி மரியம் ஜார்ஜ்.

## ஆரம்பப் பள்ளியில்...

ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுக்கு பிரச்சினைகள் இருப்பதில்லை. ஆனால் ஆரம்பப் பள்ளிகளின் குடிநீர், கழிப்பிடம், இவை சுகாதாரமாக இருப்பதில்லை. சில பள்ளிகளில் இவை இருப்பதே இல்லை. சுகாதாரக் குறைவான சூழ்நிலை மாணவர்களுக்கு மட்டுமன்றி ஆசிரியர்களுக்கும் பிரச்னைதானே?

''எல்லா பள்ளிகளையும் ஒன்றாக எண்ணி விடாதீர்கள். எங்கள் பள்ளியில் மாலை 7 மணி வரை ஆசிரியர்களை வீட்டிற்கு விடுவதில்லை. இதனால் திருமணமான ஒரு சக ஆசிரியை கணவரோடு மனக்கசப்பு வளர்ந்து தன் பெற்றோரோடு இப்போது வாழுகிறார். இது மட்டுமல்ல. தாமதமாக மூன்று முறை பள்ளி வந்தால் சம்பளத்தை பிடித்து விடுகிறார்கள். இவ்வளவு ஏன், நமது முதலமைச்சர் காலமான சமயம் பள்ளி இயங்காத அந்த இரண்டு நாட்களுக்கும் எங்களுக்குச் சம்பளம் கிடையாது.'' இப்படி பொருமித் தள்ளியவர் ஒரு தனியார் உயர்நிலைப் பள்ளியில் பணிபுரியும் செல்வி. காமாக்ஷி.

## உயர்நிலைப் பள்ளியில்...

உயர்நிலைப் பள்ளியில் என்ன பிரச்சினை? நிறைய இருக்கிறது. ஆறும் வகுப்பு ஆங்கில போதனாமொழியாக உள்ள பிரிவில் அதிக போட்டியோடு மாணவர்கள் சேருகிறார்களே இது ஏன்? கேள்விக்கு சைதாப்பேட்டையைச் சேர்ந்த ஒரு பள்ளியின் தலைமை ஆசிரியை பதிலளிக்கிறார்.

''பெற்றோர்கள் எப்படியாவது தங்கள் பிள்ளைகளை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்னும் ஆர்வத்தில் ஐந்து வகுப்பு வரை ஆங்கில போதனாமொழிப் பள்ளிகளில் சேர்த்து விடுகிறார்கள். ஆனால் உயர்நிலைப் பள்ளிகளில் ஒவ்வொரு வகுப்பிலும் இரண்டு அல்லது ஒரு ஆங்கிலப் பிரிவு தான் உள்ளது. இதனால் இப்பிரிவுகளில் 100 அல்லது 120 மாணவர்கள் படிக்க நேரிடுகிறது. அதே சமயம் தமிழ் மீடியம் பிரிவுகளில் 40 அல்லது 45 மாணவர்கள் தாம் படிக்கிறார்கள். இதைத் தவிர்க்க அரசாங்கம் நர்ஸரிப் பள்ளிகளின் தரத்தை உயர்த்தி, எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தும் சட்டத்தை இயற்ற வேண்டும். அதே சமயம் உயர்நிலைப் பள்ளிகளில் ஆங்கில போதனாமொழிப் பிரிவுகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டும்''

இதே பிரச்சினையை ஆசிரியர் கோணத்திலிருந்து அணுகுகிறார் க்ரைஸ்ட் கிங் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் பணிபுரியும் திருமதி. பிரேமா ராஜன் அவர்கள்.

''ஒரே வகுப்பில் நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்கள் இருப்பதால் தனிப்பட்ட முறையில் மாணவிகளிடம் கவனம் செலுத்த முடிவதில்லை. மாணவிகளுக்கும் கரும்பலகையை கவனிப்பதும், வகுப்பில் வசதியாக அமர்ந்து எழுதுவதும் இயலாமல் போகிறது. ஆங்கிலப் பிரிவு ஆசிரியர்களுக்கு பரீட்சைத் தாள்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் திருத்துவதிலும் வேலைப்பளு அதிகரிக்கிறது.

## 'ஹோம் ஒர்க்' பிரச்னைக்கு ஒரு தீர்வு!

'ஹோம் வொர்க்' பற்றி கேட்ட போது ''பல பள்ளிகளில் ஆசிரியர்கள் நிறைய வீட்டுப் பாடம் கொடுப்பதாகப் பெற்றோர்கள் குறை கூறுகிறார்கள். ஆனால் எங்கள் பள்ளியில் ஒவ்வொரு நாளும், கடைசி பீரியட் 'சூபர்வைஸ்ட் ஸ்டடீஸ்' ஒதுக்குகிறோம். மாணவிகள் அன்றைய வீட்டுப் பாடத்தைச் செய்து விடுகிறார்கள். ஆசிரியரும் உடன் இருப்பதால் வீட்டில் தாய், தந்தை இருவருமே வேலைக்குப் போகும் மாணவிகளுக்கும், பாடத்தில் உதவ முடியாத பெற்றோர்களின் குழந்தைகளுக்கும் வீட்டுப் பாடம் செய்வது பிரச்சினையாக இருக்காது. இதை மற்ற பள்ளிகளிலும் பின்பற்றலாமே?

## ஆசிரியர்களைச் சக்கையாகப் பிழிகிறார்கள்!

பள்ளியின் தேர்வு முடிவு 100 சதவீதம் இருக்க வேண்டும் என்னும் கொள்கையுள்ள பல பள்ளிகளில் ஆசிரியர்களைச் சக்கையாகப் பிழிகிறார்கள். தேர்வு சமயம் 'வீக்' மாணவர்கள் கூடவே இருந்து அவர்களைக் 'கோச்' செய்ய வேண்டும். விடுமுறை நாட்களில் கூட 'ஸ்பெஷல் க்ளாஸ்' வைக்க வேண்டும். இது திருமணமாகாத பெண்களுக்கும் சரி, குடும்பம் நடத்தும் திருமண

மாணவர்களுக்கும் சரி பல இன்னல்களைத் தருகிறது என்கிறார் செல்வி அனிதா.

''எங்கள் பள்ளியில் தலைமை ஆசிரியையின் கெடுபிடி மிக அதிகம். அவரைக் கண்டாலே எங்களுக்குக் குலை நடுக்கம்தான். அவரது வசைச் சொற்களையும், கொடுமைகளையும் அனுபவித்த எங்களுக்குத் தனியாக மாமியார் என்ற ஒருவர் தேவையே இல்லை. ஒரு ஆண்டு விழா சமயம் காலை 5.30 மணிக்குப் பள்ளிக்கு வரவில்லை என்பதற்காக அன்று முழுவதும் ஆபீஸ் ரூம் வாசலிலேயே என்னை நிற்க வைத்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்கிறார் இன்னொருவர்.

சிலர் தங்கள் பள்ளியில் எம்.ஏ., பி.எட்., போன்ற கல்வித் தகுதிகளை வளர்த்துக் கொள்ள தலைமை ஆசிரியர் அனுமதி வழங்குவதில்லை என்றார்கள்.

### பெற்றோரும் பிரச்னைகளும்!

''எல். கே. ஜி. வகுப்புகளில் வெறும் பாட்டு கதை என்று சொல்லிக் கொடுத்தால் மற்ற பள்ளிகளில் ஆங்கிலம், தமிழ், கணக்கு எல்லாம் எல்.கே.ஜி.யிலேயே கற்பிக்கிறார்களே என்று குறை கூறுகிறார்கள். அதே சமயம் ஒரு நாள் சேர்ந்த மாதிரி எழுத்து வேலை அதிகமாகக் கொடுத்தால் ''பிஞ்சு விரல்கள் எப்படி வலிக்கும்? எதற்காக இவ்வளவு எழுத வைக்கிறீர்கள்?'' என்று மறுநாள் சண்டை போடுகிறார்கள். சிலர் தங்கள் பிள்ளைதான் முதல் ரேங்க் வரவேண்டும் என்பதற்காக குழந்தைகளை வீட்டில் அடிப்பதோடு பள்ளியிலும் ஆசிரியைகளை 'ஓர வஞ்சனை' என்று குறை கூறுகிறார்கள். இத்தகைய பிரச்சினையைத் தீர்க்க 5 வகுப்பு வரை ரேங்க் போடாமல் கிரேடு போட வேண்டும்'' என்கிறார் திருமதி மாலினி.

### காப்பியடித்தால் சிறைத் தண்டனை பற்றி...

தேர்வு சமயம் காப்பியடிக்கும் மாணவர்களுக்கும் உதவும் ஆசிரியர்களுக்கும் சிறை தண்டனை அளிப்பது பற்றி கேட்ட போது, ''ஏற்கெனவே படிப்பிற்கு மதிப்பு இல்லை. இத்தகைய தண்டனைகளால் பள்ளிப் படிப்பை மேலே தொடர இயலாத பலர் சமுதாயத்தில் நச்சு விதையாக மாறிவிடுவார்கள். இப்படி தண்டனை அளிப்பதால் தனக்குப் பிடிக்காத ஆசிரியரை, மாணவனும், மாணவனை ஆசிரியரும் வேண்டுமென்றே பொய்க் குற்றம் சாட்டி பழிவாங்க வாய்ப்பு ஏற்படுகிறதல்லவா?'' என்றார்கள்.

### கல்லூரி அளவில்...

கல்லூரி ஆசிரியர்கள் போராட்டம் என்று அமர்க்களப்பட்டதே, அது எதற்கு, அதன் முடிவு என்ன? இக்கேள்விக்கு அனல் கக்கும் பதிலைத் தருபவர், சென்னை எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரியின் தாவரவியல் துறைத் தலைவர் திரு ஜி. ராஜா.



பிரேமா

''1973க்குப் பிறகு அரசின் மற்ற துறைகளின் ஊதிய விகிதம் பலமுறை உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் கல்லூரி ஆசிரியர்களின் ஊதியம் மட்டும் மாறவே இல்லை. விஷம் போல ஏறிவரும் விலைவாசியில் எப்படிக் குடும்பம் நடத்துவது? மத்திய அரசால் நிறுவப்பட்ட பல்கலைக்கழக மானியக் குழு கமிஷன் நிர்ணயித்த சம்பள விகிதத்தை மற்ற மாநிலங்கள் செயல்படுத்த, தமிழக அரசு மட்டும் ஊதிய விகிதத்தை அறிவித்ததோடு நின்றுவிட்டது. செயல் முறையில் இன்னும் அமுலாக்கவில்லை. போராடினால் சிறைவாசம், சர்வீஸ் புத்தகத்தில் கரும் புள்ளிகள்.

இவ்வளவு தொல்லைகளுக்கும் இடையிலும் நாங்கள் போராடிய நாட்களில் விட்டுப் போன பாடங்களை விடுமுறை நாட்களில் மாணவர்களுக்கு வகுப்பு வைத்து நடத்தினோம். ஆசிரியர்களின் வாழ்வில் ஒளி வீசும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்'' என்கிறார் இவர்.

பெண்கள் கல்லூரி ஆசிரியர் ஒருவரை அணுகிய போது ''பள்ளிகளில் நடப்பது போல் கல்லூரி முதல்வருக்கும், ஆசிரியைகளுக்கும் இடையே எப்போதும் ஒரு பனிப் போர் இருக்கிறது. தற்போது எம்.ஃபில் செய்வது கட்டாயமாக்கப்பட்டுள்ளது. எங்களைப் போன்ற பல ஸீனியர்கள் எம்.ஃபில் செய்யாதவர்கள். எங்கள் ஸர்வீஸ் கணக்கிடப்படுவதில்லை. அதனால் நாங்களும் செய்ய வேண்டியுள்ளது. தவிர பல ஆண்டுகளுக்கு முன் பட்ட மேற்படிப்பு படித்த எங்களை விட இப்போது வரும் இளம் ஆசிரியைகள் அதிக தொழில் நுட்ப விவரங்களையும், விஞ்ஞான முன்னேற்றங்களையும் படித்து வந்திருக்கிறார்கள். அதனால் எங்களை மிகவும் மட்டமாக நினைப்பதும் பேசுவதும் சகஜமாக இருக்கிறது. பொதுவாகவே ஆசிரியர்களை மாணவர்கள் மதிப்பது தற்காலத்தில் மிகவும் குறைந்து விட்டது.'' என்றார்.

கல்லூரி அளவிலும் சில சமயங்களில் அந்தந்தத் துறைத் தலைவர் தங்களுக்குக் கீழே வேலை பார்க்கும் ஆசிரியைகளை சீண்டத்தான் செய்கிறார்களாம். எவ்வளவோ அவமானங்களுக்கு இடையிலும் பணிசெய்ய வேண்டியதாகத்தான் இருக்கிறது என்றார் ஒருவர் கண்ணீர் மல்க.

— லக்ஷ்மி சங்கர்

# இம்மாத இல்லத்தரசி

• ருக்மணி



**முதல் பரிசு ரூ. 250/–**

## முத்துப் பொங்கல்

தேவையான பொருட்கள்:

பயத்தம் பருப்பு – 1 கப்
பாம்பே ரவா – 1 கப்
கோதுமை ரவா – 1 கப்
ஜவ்வரிசி – 1 கப்
இஞ்சி – 1 சிறுதுண்டு
கசகசா – 1 டீஸ்பூன்.
தேங்காய்த் துருவல் – ½ கப்
உப்பு – தேவைகேற்ப
மிளகு – 1 டீஸ்பூன்.
சீரகம் – 1 டீஸ்பூன்.
பச்சை மிளகாய் – 2 சின்னது
முந்திரிப் பருப்பு – 25 கிராம்.
கருவேப்பிலை – 2 கொத்து
டால்டா – ½ கப்
நல்ல நெய் – 2 டீஸ்பூன்.

செய்முறை:

பயத்தம் பருப்பு, ரவா, ஜவ்வரிசி, கோதுமை ரவா நான்கையும் வாசனை வர வறுத்துக் கொள்ளவும். குக்கரில் பத்து கப் தண்ணீர் விட்டு சூடானதும் மேலே கூறிய வற்றை குக்கரில் போட்டு மூடிவைக்கவும். மூன்று, நான்கு சத்தம் வரும் வரை வைத்து இருக்கவும். கசகசா, தேங்காய், பச்சை மிளகாய் இவற்றை நன்ருக அரைத்துக் கொள்ளவும். வாணலியில் டால்டாவை விட்டு முந்திரிப் பருப்பையும், மிளகு சீரகத் தையும் வறுத்துக் கொள்ளவும். மீதி டால் டாவை வாணலியில் விட்டு அரைத்த கச கசா, தேங்காய் முதலியவற்றை போட்டு வதக்கி கொள்ளவும். குக்கரில் வெந்தவற்று டன் வறுத்த முந்திரிப் பருப்பு, சீரகம் மற் றும் கசகசா, தேங்காய் அரைத்த விழுது

• கீதா



டன் இவற்றைச் சேர்க்கவும். பின் தேவை யான உப்பு, கறிவேப்பிலை இவற்றைச் சேர்க்கவும். பின் நல்ல நெய் சேர்க்கவும்.

## சட்னி – பரங்கி மசியல்

தேவையான பொருட்கள்:

பரங்கிக்காய் – 250 கிராம்
பச்சை மிளகாய் – 4
இஞ்சி – 1 சிறுதுண்டு
தக்காளி – 100 கிராம்
கடுகு – 1 டீஸ்பூன்.
மஞ்சள் பொடி – 1 டீஸ்பூன்.
உப்பு – தேவையான அளவு
பச்சை கொத்தமல்லி – சிறு துண்டு.

செய்முறை:

பரங்கிக்காயைத் தோல் நீக்கி சிறு துண்டுகளாக்கிக் கொள்ளவும். பச்சை மிளகாய், இஞ்சி, தக்காளி முதலியவற்றையும் சிறு துண்டுகளாக்கிக் கொள்ளவும். பரங்கிக்காயை நன்றாக வேக விடவும். வேகவிடும் போதே உப்பு, மஞ்சள் பொடியைச் சேர்த்து விடவும். கடுகை தாளித்துக் கொண்டு பச்சை மிளகாய், இஞ்சி, தக்காளியை வதக்கிக் கொள்ளவும். இதை வெந்த பரங்கித் துண்டுகளுடன் சேர்த்துக் கொள்ளவும். இதை சிறிது தளர விடவும். இத்துடன் கொத்தமல்லியை சேர்த்துக் கொள்ளவும். இது பொங்கலுக்கு தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும்.

— ஜி. ருக்மணி, கல்கத்தா.

## இரண்டாம் பரிசு ரூ. 150/—

### இட்லிப் பொங்கல்

தேவையான பொருட்கள்:

பாசிப் பருப்பு (உடைத்தது) — 1 ஆழாக்கு.
மிளகு — 1 டீஸ்பூன்.
சீரகம் — 2 டீஸ்பூன்.
பெருங்காயம் — சிறிதளவு.
தேவைக்கேற்ப உப்பு.
இஞ்சி — 1 சென்டி மீட்டர்.
கறிவேப்பிலை — 1 கொத்து.
வேக வைத்த இட்லி — 12.
முந்திரி — 10 (முழு பருப்பு).
சிறிது மஞ்சள் தூள்.
டால்டா (அ) நெய் — 100 கிராம்.

செய்முறை:

முதலில் பாசிப் பருப்பைத் திக்காக வேக வைத்துக் கொண்டு கீழே இறக்கி வைத்து மேலே கூறிய பொருட்களை டால்டாவில் பொரித்துப் போடவும். பெருங்காயம் பாசிப் பருப்பில் வேக வைக்க வேண்டும். வேக வைத்த இட்லிகளைக் கையில் டால்டா அல்லது நல்லெண்ணெய் தொட்டு நன்றாக உதிர்த்துக் கொள்ள வேண்டும். சாதம் வெவ

ஆன்ட்டனாவிலிருந்து வரும் அதிகமான வயரை டீ.விக்குப் பக்கத்தில் கன்னா பின்னாவென்று சுருட்டியும், தாறுமாறாகப் பரத்தியும் வைக்காமல் அழகாகச் செண்டு போல வளைத்துக் கட்டி, நடுவில் ஒரு கலர் பூவையும் சொருகி ஸ்டாண்டுக்கு அடியில் வைத்துப் பாருங்கள். ஆகா! என்று வருபவர்கள் கண்கள் ஆச்சரியத்துடன் பார்க்கும்.

— உமா.



● பாண்ட், ஷர்ட்டுகளை துவைக்கும் முன்பு பிரித்துப் பார்த்தால் மட்டும் போதாது. காய வைத்து மடிக்கும் போதும் பார்க்க வேண்டும். பெரிய வண்டு, மற்றும் உடம்புக்கு அலர்ஜியை உண்டாக்கும் பூச்சிகளும் உள்ளே தங்கியிருக்கும்.

— உமா.

வில் இருக்க வேண்டும். பிசையக் கூடாது. பிறகு உதிர்த்த இட்லிகளையும், பருப்பையும் கலந்து ஒரு வேக்காட்டிற்கு விடவும்.

உப்பு திட்டமாக கூடுமானவரை கம்மியாகப் போட்டாலே சுவை, இதற்கு வேர்க்கடலை சட்னி சுவையாக இருக்கும்.

— சக்குபாய் சுந்தரம், சென்னை — 44.

## மூன்றாம் பரிசு ரூ. 100/—

### மிக்ஸட் பொங்கல்

தேவையான பொருட்கள்:

பச்சரிசி — 1 ஆழாக்கு.
அவல் — ½ ஆழாக்கு.
பயத்தம்பருப்பு — ½ ஆழாக்கு.
ரவை — ½ ஆழாக்கு.
மிளகு — 1 டீஸ்பூன்.
சீரகம் — 1 டீஸ்பூன்.
இஞ்சி — 1 துண்டு.
கறிவேப்பிலை — சிறிதளவு.
முந்திரிப் பருப்பு — 50 கிராம்.
பெருங்காயம் — சிறிதளவு.
நெய் & டால்டா — 150 கிராம்.
உப்பு — தேவையான அளவு.

செய்முறை:

அவலை நன்கு புடைத்து மண் இல்லாமல் சுத்தம் செய்து ஒரு ஸ்பூன் நெய் (அ) டால்டா விட்டு வறுத்துக் கொள்ளவும். ரவையையும் நெய் விட்டு வறுத்துக் கொள்ளவும். மிளகு சீரகத்தை ஒன்றிரண்டாகத் தட்டிக் கொள்ளவும். இஞ்சியையும் தட்டி வைத்துக் கொள்ளவும். அரிசியைக் களைந்து பயத்தம் பருப்பு, ரவை, அவலுடன் சேர்த்துத் தட்டிய இஞ்சி, பெருங்காயம் இவற்றுடன் சேர்த்து ஒரு பாத்திரத்தில் போட்டு 5 ஆழாக்கு ஜலம் சேர்த்துக் குக்கரில் வைத்து வேக விடவும். வெந்தபின் எடுத்து நன்கு மசித்துத் தேவையான உப்பைச் சேர்க்கவும்.

ஒரு வாணலியில் டால்டாவை விட்டு முந்திரிப் பருப்பை வறுத்து, மிளகு, சீரகம், கறிவேப்பிலை போட்டு அது படபடவெனப் பொரிந்ததும் மசித்து வைத்த பொங்கலைச்

# இல்லந்தோறும் ஒளிர வேண்டிய லிப்கோ நூல்கள்

| எண் | நூல் | ரூ. காசு |
|---|---|---|
| 1. | தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி | .. 32-00 |
| 2. | ஹிந்தி-தமிழ் அகராதி | .. 28-00 |
| 3. | ஹிந்தி ஆசிரியன் | .. 9-00 |
| 4. | ஆங்கில ஆசிரியன் | .. 19-00 |
| 5. | சமைப்பது எப்படி? | .. 6-00 |
| 6. | குழந்தை வளர்ப்புக் கலை | .. 5-00 |
| 7. | குழந்தைக்கு வீட்டு வைத்தியம் | .. 1-00 |
| 8. | நூயறகை தரும் இன்மருந்துகள் | .. 12-00 |
| 9. | வள்ளுவர் வாய்மொழி - குறள் மூலம் | .. 1.50 |
| 10. | வள்ளுவர் மொழியும் தெள்ளிய உரையும் | .. 5-00 |
| 11. | குறள் மணிக்கதைகள் - 2 புத்தகங்கள் - ஒவ்வொன்றும் | .. 2-50 |
| 12. | ஸுந்தர காண்டம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்தில் | .. 14-00 |
| 13. | ஸுந்தர காண்டம்-மூலம் தமிழில் | .. 14-00 |
| 14. | ஸுந்தர காண்டம்-ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் | .. 24-00 |
| 15. | ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் - ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் - பால காண்டம் முதல் யுத்த காண்டம் முடிய 2 பாகங்களில் 1800 பக்கங்கள் | .. 125-00 |
| 16. | ஸகல கார்ய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் - ஸ்தோத்ரமாலையுடன் | .. 16-00 |
| 17. | ஸ்தோத்ரமாலை | .. 4-00 |
| 18. | ஸ்ரீ ராம ஸ்தோத்ரமாலா - தமிழில் | .. 6-00 |
| 19. | ஸ்ரீ த்யாகராஜ க்ருதி ராமாயணம் | .. 3-00 |
| 20. | கம்ப ராமாயணம் - வசனம் | .. 12-00 |
| 21. | ரகுவம்ச மஹாகாவ்யம் - உரையுடன் | .. 55-00 |
| 22. | குமாரஸம்பவம் - உரையுடன் | .. 25-00 |
| 23. | மேக ஸந்தேசம் - உரையுடன் | .. 20-00 |
| 24. | ருது ஸம்ஹாரம் - கருத்துரையுடன் | .. 4-00 |
| 25. | ஸ்ரீமத் பகவத் கீதை - மூலம் தமிழில் உரையுடன் | .. 11-00 |
| 26. | மாங்கல்ய ஸ்தவம் | .. 1-50 |
| 27. | ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஹ்ருதயம் | .. 1-50 |
| 28. | ஸ்ரீ நாராயண கவசம் | .. 2-00 |
| 29. | ஸ்ரீ வராஹ கவசம் | .. 2-00 |
| 30. | நாலாயிர திவ்யப் பிரபந்தம் - 2 பாகங்களில் | .. 80-00 |
| 31. | நூற்றெட்டு ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவம் | .. 6-00 |
| 32. | பன்னிரு ஆழ்வார்கள் | .. 2-00 |
| 33. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் - அர்த்தத்துடன் | .. 15-00 |
| 34. | ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் - உரையுடன் | .. 48-00 |
| 35. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள் - உரையுடன் | .. 60-00 |
| 36. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள்-மூலம் ஸம்ஸ்க்ருதத்தில் | .. 12-00 |
| 37. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள்-மூலம் தமிழில் | .. 5-20 |
| 38. | ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும் ஸகல கார்ய ஸித்தியும் | .. 3-00 |
| 39. | இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்ம்யம் | .. 8-00 |
| 40. | ஸ்ரீ குருவாயூர் அப்பன் ஸுப்ரபாதம் | .. 0-60 |
| 41. | ஸ்ரீ முகுந்தமாலா | .. 2-00 |
| 42. | பஜ கோவிந்தம் | .. 1-50 |
| 43. | ஸ்ரீ மஹா பக்த விஜயம் | .. 15-00 |
| 44. | அபிராமி அந்தாதி - உரையுடன் | .. 2-50 |
| 45. | ஸ்ரீ ஸௌந்தர்யலஹரி - உரையுடன் | .. 4-00 |
| 46. | ஸகல கார்ய ஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும் | .. 6-00 |
| 47. | பெரிய புராணம் - சுருக்கம் | .. 2-00 |
| 48. | திருவிளையாடற் புராணம்-சுருக்கம் | .. 2-50 |
| 49. | ஸ்ரீ ஸத்யநாராயண வ்ரதம் | .. 1-50 |
| 50. | ஸ்ரீ லக்ஷ்மீ குபேர பூஜாக்ரமம் | .. 1-00 |
| 51. | குடும்ப ஜோதிடம் | .. 10-00 |
| 52. | நவக்ரஹ க்ஷேத்ர புராணம் | .. 7-20 |
| 53. | ஸ்ரீ சனிக்ரஹ சாந்தி பூஜா விதானம் | .. 2-50 |
| 54. | விரத பூஜா விதானம் - 36 பூஜைகள் | .. 10-00 |
| 55. | உங்கள் பிறந்த தேதியும் வாழ்க்கை ரகசியங்களும் | .. 3-50 |
| 56. | உடல் மச்சங்களும் உங்கள் வாழ்க்கை ரகசியங்களும் | .. 2-50 |
| 57. | திருப்புகழ் மஞ்சரி | .. 3-00 |
| 58. | ஆறுமுகனுக்குகந்த ஆறு படை வீடுகள் | .. 11-00 |
| 59. | கந்தர் சஷ்டி கவசம், சண்முக கவசம், ஸ்ரீ ஸ்கந்த குரு கவசம் | .. 0-80 |
| 60. | ரிஷிகளும் கோத்ரங்களும் | .. 6-50 |
| 61. | திருப்பாவை, திருவெம்பாவை | .. 0-60 |
| 62. | கௌரீ கல்யாணம் வைபோகமே - கல்யாண பண்டிகை, மங்கள ஹாரதி பாட்டுகள் | .. 8-00 |

### விசேஷச் சலுகை

எல்லாவற்றிற்கும் தபாற் செலவு பிரத்யேகம். ஆனால், 16-2-1988-க்குள் இவ்விளம்பரத்தைக் குறிப்பிட்டு, ஒரே சமயத்தில் ரூ. 60-க்குக் குறையாமல் எமக்கு ஆர்டர் செய்தால், எங்கள் செலவிலேயே (இந்தியாவிற்குள்) புத்தகங்களை அனுப்பிவைக்கிறோம். பூராவும் முன் பணம் (M.O. அல்லது டிராப்ட் மூலம் மட்டுமே) அனுப்புக. V.P.P. மூலம் அனுப்ப இயலாது.

**தி லிட்டில் ஃப்ளவர் கம்பெனி**

43, ரங்கநாதன் தெரு, தபால் பை 1028
தியாகராயநகர், சென்னை-600 017

போன்: 441538

வைர விழா நோக்கிப் பீடுநடை போடுவோர்





மருந்தூள் வைத்திருக்கும் பாட்டிலில் உபயோகித்த ஏலக்காய் தோல்களைப் போட்டு வைத்திருந்தால் ஏல மணத்தோடு இருக்கிறது. ஏல விதைகளின்றி மணத்தைப் பெறலாம் என்றால், லாபம் தானே!

— ராஜம் ஸ்ரீநிவாஸ்.

சேர்த்து நன்கு கிளறி எல்லாம் ஒன்றாகிக் கெட்டியானதும் கரண்டியால் சமப்படுத்தி மேலாகச் சிறிது நெய்யை ஊற்றிவிட்டு வைக்கவும்.

— கீதாகுமார், நெய்வேலி.

**ஆறுதல் பரிசு ரூ. 50/—**

### வெந்தயப் பொங்கல்

தேவையான பொருட்கள்:

பச்சரிசி — 1 ஆழாக்கு.
வெந்தயம் — 15 கிராம்.
தண்ணீர் — 5 ஆழாக்கு.
பூண்டு — 25 கிராம்.
மிளகு — 1 ஸ்பூன்.
சீரகம் — 1 ஸ்பூன்.
மோர் மிளகாய் — 4.
எலுமிச்சம்பழம் — 1.
கறிவேப்பிலை — 2 இணுக்கு.
உப்பு — 1 ஸ்பூன்.
நெய்(அ) டால்டா(அ) ரீபைண்ட் ஆயில் — 50 கிராம்.

செய்முறை:

ஒரு பாத்திரத்தில் நீர் ஊற்றி அடுப்பில் வைத்துக் கொதி வந்ததும், வெந்தயம் போட்டு, தணலைக் குறைக்க வேண்டும். வெந்தயம் நன்றாக வெந்ததும், அரிசியைக் கழுவி, நீர் வடித்துப் போட வேண்டும். பிறகு நெய்யில் மோர் மிளகாய், மிளகு, சீரகம், உரித்த பூண்டு இவற்றைத் தாளித்துக் கொட்ட வேண்டும். அரிசி வெந்ததும் எலுமிச்சை ரசம், உப்பு, கறிவேப்பிலை, மீதியுள்ள நெய் ஆகியவற்றைப் போட்டு நன்றாகக் கிளறி இறக்க வேண்டும்.

இதற்குத் தொட்டுக் கொள்ள தக்காளி + பருப்பு சாம்பார் ஏற்றவை.

— பிரமீளா, கொள்ளேகால்.

**ஆறுதல் பரிசு ரூ. 50/—**

### கல்யாணப் பொங்கல்

தேவையான பொருட்கள்:

அரிசி — 3 ஆழாக்கு.
துவரம் பருப்பு — 1 ஆழாக்கு.
தனியா — இரண்டு டேபிள் ஸ்பூன்.
உளுத்தம்பருப்பு — 1 டேபிள் ஸ்பூன்.
மிளகாய் வற்றல் — ஆறு.
பெருங்காயம் — சிறு துண்டு.
நெய் — ஒரு கரண்டி.
நல்லெண்ணெய் — ஒரு கரண்டி.
உப்பு — தேவையான அளவு.

செய்முறை: துவரம் பருப்பையும், அரிசியையும் நன்றாகக் களைந்து அரித்து ஒன்றுக்கு இரண்டு ஜலம் விட்டுக் குக்கரில் குழைவாக வேக வைத்துக் கொண்டு, மற்ற சாமான்களைச் சிறிது எண்ணெய் ஊற்றி இலுப்பச் சட்டியில் சிவக்க வறுத்து அம்மியில் பொடி செய்து வேக வைத்த சாதத்தில் சிறிது மஞ்சள் பொடியும் தேவையான உப்பும் சேர்த்து நன்றாகக் கலக்கவும். மீதமுள்ள எண்ணெயையும், நெய்யையும் சிறிது சூடு செய்து பொங்கலில் விட்டு நன்றாகக் கலக்கவும். இத்துடன் பறங்கிக்காய் கொத்சு, கொத்துமல்லி, பச்சை மிளகாய், கறிவேப்பிலை போட்டுச் செய்து பொங்கலுடன் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும்.

— சகாயவல்லி அம்மாள், மானாமதுரை.

---

### "ச்" எங்கே?

ஒரு நாள் வகுப்பில், ஒரு மாணவி, 'மகிழ்ச்சி' என்பதற்கு 'மகிழ்சி' என்று பிழையாக எழுதியிருந்தாள். நான், அவளின் தவறைச் சுட்டிக் காட்டி, "ஏண்டி... இவ்வளவு வளர்ந்தும் 'மகிழ்ச்சி'ங்கறதை ஒழுங்கா எழுதத் தெரியலையே..." 'ச்' இல்லாம எப்படி மகிழ்ச்சி வரும்?" என்று கேட்டதுதான் தாமதம், அந்த மாணவி உட்பட வகுப்பே 'கொல்'லென்று சிரித்தது. முதலில், எனக்கு ஒன்றுமே புரியவில்லை. பிறகுதான், நான் கடைசியாகச் சொன்னதை, அவர்கள், "இச்" (முத்தம்) இல்லாம எப்படி மகிழ்ச்சி வரும்?' என்று பொருள் கொண்டது புரிந்தது. அப்பப்பா... இக்கால மாணவிகளிடம் ரொம்ப ஜாக்கிரதையாகப் பேச வேண்டும்.

— ஸ்டெல்லா.



# இரண்டு தலைமுறைக்கு முன்னால்...



பாளையங்கோட்டையில் ஒரு பெண் ஆசிரியையோடு பேசிக் கொண்டிருந்தபோது, ஒரு கருத்தைத் தெரிவித்தார்: "1947-ஆம் வருடத்திற்கு முன்னால் அல்லது ஒன்றிரண்டு தலைமுறைக்கு முன்னால் என்று கூட வைத்துக் கொள்ளலாம். திருமணமான பெண்கள் ஆசிரியைத் தொழிலுக்கு வர மாட்டார்கள். வந்தவர்கள் கடைசி காலம் வரை திருமணம் ஆகாமலே இருந்திருக்கிறார்கள், இல்லை, விதவையானவர்கள் இத்தொழிலை ஏற்று இருக்கிறார்கள்" என்று சொன்னார். இதே கருத்தைச் சில வயதானவர்களும் ஆமோதித்தார்கள். ஏன் இப்படியொரு நிலை?

பொதுவாக பெண்கள் அந்தக் காலத்தில் படிப்பில் அதிகம் அக்கறை காட்ட மாட்டார்கள். பெண் கல்வியை அன்று யாரும் வலியுறுத்தவில்லை. எனவே தொழில் துறைகளுக்குப் பெண்கள் வருவதே அரிது. கடினமான வேலை, ஆண்களுடன் பழக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இவைகளுக்கெல்லாம் சமூகக் கட்டுப்பாடு ஒரு காலத்தில் இருந்ததால் பெண்கள் வேலை வாய்ப்பில் அக்கறையே காட்டவில்லை. ஆனால் சில பெண்கள் துணிந்து படித்த போதும் கூட, தங்களுக்கு ஏற்ற வேலை ஆசிரியை வேலை என்றே முடிவு கட்டினார்கள். இந்தக் காரணம் இவ்வேலையில் முழுப் பாதுகாப்பு இருந்தது தான்.

செகண்டரி கிரேடு டீச்சர் டிரெயினிங் படிக்க வேண்டுமானால் குடும்பம், ஊர் இவைகளை மறந்து டிரெயினிங் நடக்கும் இடத்திற்குப் பெண்கள் போக வேண்டியிருந்தது. குடும்பத்திலிருந்து ஓரிரண்டு வருடங்கள் தனிமைப்பட்டவர்களுக்கு ஆசிரியர் தொழில் தெய்வீகத் தொழிலாகத் தெரிந்திருக்கலாம். தான் கல்யாணம் செய்து கொண்டால் கணவன், குழந்தை, குடும்பம் என்று தன்னுடைய கவனம் சிதறுமே தவிர ஆத்ம திருப்தியுடன் பணியில் ஈடுபட முடியாது என்று அவர்கள் எண்ணியே திருமணம் செய்யாமல் இருந்திருக்கலாம். ஆசிரியர் தொழிலை அக்காலத்தில் புனிதமான தொழில் என்றே பலரும் எண்ணினார்கள். இன்றைய நாகரிக உலகில் மக்கள் தொடர்பு சாதனங்களின் வளர்ச்சியோடும், அபரிமிதமான கல்வி வளர்ச்சியோடும் அன்றைய நாட்களை ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது.

அதனாலேயே ஊரில் ஒரு நல்லது கெட்டது என்றாலோ, சமூக சேவை என்றாலோ ஆசிரியர்களுக்கு கிராம முன்சீப்களுக்கு அடுத்தபடி இடம் கிடைத்தது. சமூகத்தோடு மிகுந்த ஈடுபாடு கொண்ட பின்பு சேவை மனப்பான்மை வளருமே தவிர, தான், தன் குடும்பம் என்று நினைக்கத் தோன்றாது பெண்களுக்கு. தமிழகத்தில் பல புகழ்பெற்ற பள்ளிகள் இப்படி சமூக சேவகிகளால் நிறுவப்பட்டு இருக்கின்றன.



கணவனை இழந்த நிலையில் குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பு சில பெண்களின் தலையில் சுமத்தப்பட்ட போதும் அவர்கள் ஆசிரியைத் தொழிலையே ஏற்றுக் கொண்டனர். அக்காலத்தில் எல்லாம் வங்கி உத்தியோகங்களிலோ, அரசு உத்தியோகங்களிலோ, பெண்கள் புக மாட்டார்கள். அதுவும் திக்கற்ற பெண்களுக்கு என ஆரம்பிக்கப்பட்ட பள்ளிகளில் ஆண்கள் இருப்பதில்லை. எனவே, தைரியமாக இப்பணியில் புகுந்தனர். இப்படித்தான் இரண்டு தலை முறைக்கு முன்னால் ஆசிரியை தொழிலில் பெண்கள் புகுந்தார்கள்'' என்றார் வயதான ஆசிரியை ஒருவர்.

இன்னொரு காரணமும் இதற்கு உண்டு. மேனாட்டுக் கல்வி அறிவும், பல கல்விச் சாலைகளும் தமிழகத்தில் பெருகியது கிறிஸ்துவர்களின் வருகைக்குப்பின்புதான் கும்பினிக் காரர்கள் வந்தபோது பல கல்விச் சாலைகளை அமைத்தார்கள். கிறிஸ்துவ மதத்தில் சேவை செய்ய முன்வரும் பெண்களே பெரும்பாலும் ஆசிரியையானார்கள். இவர்கள் கன்னியா ஸ்திரீகள் என்று அழைக்கப்படுபவர்கள். இவர்களும் பெரும்பாலும் கல்விச் சாலைகளிலேயே தங்கள் வாழ்க்கையைக் கழித்தனர் எனலாம்.

—தாம்பிரவருணி

# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் (பி) லிட்

நிர்வாக அலுவலகம் :-
39, நடேசன் தெரு (2-வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில்
தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494

## துவங்கும் புதிய சீட்டு குருப்புகள்
(CENTRALIZED GROUPS)

| மாதங்கள் | உறுப்பினர்கள் | சந்தா தொகை | சீட்டு தொகை |
|---|---|---|---|
| 20 | 20 | 100 | 2,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 1000 | 20,000 |
| 20 | 20 | 2000 | 40,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 500 | 20,000 |
| 100 | 100 | 250 | 25,000 |
| 100 | 100 | 500 | 50,000 |

ஏல முறை :-

1. 100 மாத சீட்டுகள் உச்சவரம்பற்ற ஏலமாக (Unlimited Bidding) மூடி முத்திரையிட்ட டெண்டர் மூலம் கோரலாம்.
2. 20/40 மாத சீட்டுகள் :- "பாதுகாப்பு தொகையுடன்" கூடிய உச்சவரம்பற்ற ஏலமாக கோரலாம்.

விசேஷ சலுகை :-

1. புதிதாக சேரும் உறுப்பினர்களுக்கு 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.
2. புதிய உறுப்பினர்களை அறிமுகம் செய்வோருக்கும் 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.

விபரம் வேண்டுவோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :-

● சென்னை :- 39, நடேசன் தெரு, (2-வது மாடி) சிவா விஷ்ணு கோயில் அருகில், தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494 ● திருச்சி :- 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397 ● கோயமுத்தூர் :- 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001, போன் :- 34369 ● மதுரை :- 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஷாப்பிங், மதுரை-625 001. போன் : 36004 ● பாண்டிச்சேரி :- 11, நேரு வீதி (கனரா வங்கி எதிரில்) 2-வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன் : 26493/26471 ● திருநெல்வேலி:- மீரான் காம்ப்ளக்ஸ் 18, K.S.N. அய்யர் ரோடு, திருநெல்வேலி-627 001. போன் : 25785/25702 ● தஞ்சாவூர் :- எண் 2 & 3 முதல் மாடி, தி.எ. கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21696/22286 ● பெங்களூர் :- 24/1-A, மார்கோஸா ரோடு, (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் :- 366971 ● கும்பகோணம் :- 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001. போன் : 22647 ● திருவண்ணாமலை :- 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483 ● பட்டுக்கோட்டை :- 121/B, தங்கசாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601. போன் : 453 ● தூத்துக்குடி 10 & 11 விக்டோரியா சாலை, தூத்துக்குடி-628 001. ● வேலூர் :- 40, தென்னைமரத் தெரு, வேலூர்-632 001

LOTUS/15/88

## சொல்ல விரும்புகிறோம்!



# பர்வதம் மாமியை மறந்துடாதீங்கோ!

✿ ஆசிரியரே! எச்சரிக்கை! அடுத்த இதழில் பர்வதம் மாமியை மறந்துடாதீங்கோ; அப்புறம் 'நான் என்ன பட்டப் பதவியிலே இருக்கேனு; பணம் பவிசுன்னு, இருக்கேனு? அதான் தொடர்ந்து அவளாலே போட முடியலே'ன்னு உங்களையே ஒரு பிடி பிடித்து விடுவார்கள்; உஷார்!

சென்னை — 14. ஜயாறு எஸ். வாசுதேவன்.

✿ தள்ளாத வயதிலும் தளராத தன்னம்பிக்கையோடு தன்னுடைய கை வேலைப்பாடுகளை கண்காட்சியாக அமைத்து அனைவரது கவனத்தையும் ஈர்த்த அந்த சந்தோஷ அம்மையார் இன்றைய பெண்குலத்திற்கே வழிகாட்டிதான்.

வடுலூர் — 19. எஸ். கண்ணன்.

✿ ஜெயமோகனின் "உப்பைத் தின்றவன்" சிறுகதை அருமை. ஆனால் கதையின் முடிவில் எதிர்பாறை பலப்பான்னையுடன் மைப்பம் இருக்கிறது. தனது பெண்ணைத் தனது கணவனுக்குப் பாரமான ஒரு சுமையாகச் சித்தரிப்பது சரியல்ல. சமூகத்தில் பெண்ணைப் பிறப்பவள் ஒரு சுமை என்று மகளிரே கருதுவது நல்லதல்ல.

"பெண் குழந்தையே பிறக்கட்டும் — மார்க்ஸ் மற்றும் பாரதியாரைப் போல வளர்ப்பேன்" என்ற வசனத்தோடு சிறுகதையின் க்ளைமாக்ஸை அமைத்திருக்கலாம். பெண்ணினத்திற்குத் தற்போது தேவைப்படுவது நம்பிக்கை ஊட்டும் கதைகள் தாம். விரக்தியைப் பிரதிபலிக்கும் 'செண்டிமெண்ட்' கதைகள் அல்ல.

சென்னை — 53. பிரேமா சேது நாராயணன்.

✿ உடம்பு இளைக்க என்ன செய்யலாம் என யோசித்துக் கொண்டிருக்கும்போது தங்கள் இதழில் "உடம்பு இளைக்க 12 வழிகள்" என்ற தலைப்பில் பல ஆசனங்கள் போட்டிருந்தது. அதைப் பின்பற்றி செய்து வருகிறேன். நன்றி!

சீர்காழி — 10. கி. ராஜேஸ்வரி.

✿ தாம்பிரவருணி தொகுத்தவை எல்லாம் சின்னச் சின்ன செய்திகள் அல்ல! பெரிய பெரிய சமாச்சாரங்கள் எல்லாம்! அந்த அளவிற்குப் படிப்பதற்குச் சுவையாகவும், அருமையாகவும் இருந்தன.

சிவகங்கை. கா. கலைச்செல்வி.

✿ தலைவலி எப்படி உருவாகிறது கட்டுரை பயனுள்ள ஒரு கட்டுரை.

குடியாத்தம். டி. எஸ். பாமா பிரபு.

✿ சென்ற மாத சிறுகதைகள் அனைத்தும் சூப்பர் "துன்பம் நேர்கையில்" ஒரியை கதாசிரியர் அநியாயமாக சாகடித்தது மனதுக்குப் பிடிக்கவில்லை.

பழனி — 1. ஆர். சித்ரா.

✿ நீங்கள் வெளிநாடு போகப் போகிறீர்களா? கட்டுரை அயல்நாடு போகப் போகும் எனக்கும் இன்னும் எத்தனையோ அன்பர்களுக்கும் உபயோகமாக இருக்கும். இது போன்ற பயனுள்ள கட்டுரைகளை மாதா மாதம் வெளியிடலாமே.

சென்னை — 5. எஸ். மீனாட்சி.

✿ பிரட்டில் இப்படி ஒரு 'பிரைட்' ஆன ஐடியாவா? இனி காய்ந்து விட்டதே என்று தூக்கிப் போடாமல் அவற்றை வித விதமாய் குழந்தைகளுக்குச் செய்து கொடுத்து அவர்களை மகிழ வைக்க மங்கையர் மலர் எங்களுக்கு தந்த வரப்பிரசாதமான ஐடியா. தொடரட்டும் உங்கள் பணி.

சென்னை — 14. தீபா ரங்கநாதன்.

# ஆசிரியர்கள் + பெற்றோர்கள் : கலந்துரையாடல்

1. திருமதி ஹேமா புருஷோத்தமன், (டீச்சர், ஜி டீ பிரைமரி ஸ்கூல்)
2. திருமதி ஏ. ஆர். கமலாவதி, (டீச்சர், பி.எஸ்.ஜி.ஆர். கிருஷ்ணம்மாள் உயர்நிலைப் பள்ளி)
3. திரு. வி. சிவராஜ், (டீச்சர், மணி மேனிலைப் பள்ளி)
4. திருமதி ஆர்.ஜெயலட்சுமி (பி.எஸ்.ஜி.ஜி.கன்யா குருகுலம் உயர்நிலைப் பள்ளி)
5. திருமதி பி. மார்கரெட், (பி.எஸ்.ஜி.ஜி. கன்யா குருகுலம் உயர்நிலைப் பள்ளி)
6. திருமதி சீதாலட்சுமி, (பெற்றோர்)
7. திரு. லட்சுமணன் (பெற்றோர்)
8. திருமதி டாக்டர் சரோஜினி
9. திருமதி தேவராஜ்



ஹேமா: ஆசிரியர்களுக்கு நல்ல மதிப்பு கிடைக்காததற்குப் பெற்றோர்களும் ஒரு வகையில் காரணம், மாணவர்கள் முன்னாலே சில பெற்றோர்கள் டீச்சரைத் திட்டுகிறார்கள். பெற்றோர் மதிப்புக் கொடுத்தால்தான் மாணவர்களும் மதிப்புக் கொடுப்பார்கள்.

மிஸஸ் தேவராஜ்: ஆசிரியர்களை விமர்சிக்கக் கூடாது; புனைப்பெயர் வைத்துக் கிண்டல் செய்யக் கூடாது என்று பெற்றோர்கள் சொல்ல வேண்டும். வலியுறுத்த வேண்டும்.

சிவராஜ்: இன்னிக்குக் குறைந்த சம்பளம் வாங்கறது யாரு? அதனாலே கூட மதிப்பும் மரியாதையும் இல்லாம போகுது.

சரோஜினி: ஒட்டு மொத்தமா பாடம், பாடம் என்பதைத் தவிர பல திறமைகளை வளர்க்கும் பழக்கமும் இருந்தால் நன்றாக இருக்கும்.

சிவராஜ்: ஸ்போர்ட்ஸில் ஈடுபடற பையனால் குறைந்தபட்சம் மார்க் கூட வாங்க முடியாமே பெயில் ஆகிவிடுகிறான். அவ

னுக்கு சதா பிராடிக்ஸ், டூர் என்று போய் விடுவதால் படிப்பு ஒரு பிரச்னை ஆகி விடுகிறது. இதற்கு அரசாங்கம் ஏதாவது செய்ய ணும்.

மார்க்ரெட்: எந்தப் பெற்றோரும் விளையாட அனுமதிப்பதில்லை. படிச்சா போதுமின்னு நெனைக்கறாங்க. மற்ற விஷயங்களிலே இறங்கினா படிப்பு கெட்டு போய் விடும் என்று நெனைக்கறாங்க.

சரோஜினி: விளையாட்டு ஆர்வம் இருந்தால் மாணவர்கள் தீய வழியில் போவது குறையும். கல் எறியும் பையனைவிட, டி.வி. யில் ஆர்வமாக கிரிக்கெட் பார்க்கும் பையனால் ஏற்படும் தீங்கு குறைவு தான். விளையாட்டில் ஆர்வம் திரும்பினால் சமுதாய தீங்குகள் குறையும்.

கமலா: ஒரு மாணவியோ, மாணவனோ படிப்பில் கவனம் இல்லாமல் இருந்தால் எத்தனையோ காரணங்கள் உண்டு. வருத்தம் தோய்ந்த மாணவியிடம் குடும்பக் கஷ்டம் காரணமாக இருக்கும்; வறுமையாக இருக்கும். (தொடர்ந்து) ஆசிரியரிடத்தில் ஒரு





தந்தையின் கண்டிப்பும், தாயின் பரிவும் இருந்தால் மாணவியின் குறைகளைக் கண்டு பிடிக்கலாம்.

தேமா: பள்ளியில் மாணவர்களுக்கு ஒரு வழிகாட்டும் நிலையம் இருக்கணும். மனோதத்துவ ரீதியில் அவர்கள் குறை என்ன என்று அறிந்து நிவர்த்தி செய்ய முடியும்.

லட்சுமணன்: என் குழந்தைகள் சுமக்கும் புத்தகங்களும், ஹோம் ஒர்க் பளுவும் குறையாதா என்று இருக்கிறது. நான் பள்ளிக்கு கொண்டு போய் விடுகிறேன். அது தான் என்னால் முடிகிறது. மற்றபடி ஹோம் ஒர்க் சூபர்வைஸ் பண்ணுவது என் மனைவி. ஃபீஸ் கட்டுவது, பரீட்சைக்குப் படிக்க வைப்பது எல்லாமே அவள் தான். எப்பப் பார்த்தாலும் என் குழந்தைகள் எழுதிக் கொண்டே இருப்பார்கள்.

சீதா: அம் ஹோம் ஒர்க் ஜாஸ்தி. வீட்டிற்கு வந்தா ஏதாவது சாப்பிட்ட உடனே அவளை எழுத வைக்கிறோம். விளையாடறதுக்கே நேரமில்லாமல் போய் விடுகிறது.

சிவராஜ்: ஆசிரியர்கள் போட்டிப் போட்டுக் கொண்டு ஒர்க் தருகிறார்கள் (ஒரே சிரிப்பு)

தேமா: இதற்குக் காரணம் இப்ப இருக்கிற சிலபஸ் தான்.

லட்சுமணன்: முக்கியமா சென்ட்ரல் ஸ்கூல் பாடத் திட்டம் தரம் மிக உயர்வு. பாடங்களும் அதிகம், சப்ஜெக்ட்டும் அதிகம்.

ஜெயலட்சுமி: பாடத் திட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கறதை மாற்றி, குழந்தைகளின் தரத்திற்கு முக்கியத்துவம் தந்தால் ஆசிரியர் இவ்வளவு வேகமாக சொல்லித் தர வேண்டாம்.

மார்க்ரெட்: ஒரு டீச்சர் என்ன தான் பண்ண முடியும்? பரீட்சை வருவதற்குள் சிலபஸ் முடிக்கணும். எல்லா மாணவிகளையும் கவனிக்கணும். ரிசல்ட்டைப் பார்த்து நிர்ணயிக்கும் பொழுது ஹோம் ஒர்க் கொடுத்தாலாவது தெரியட்டுமே என்று நினைக்கலாம் இல்லியா?

கமலா: கொஞ்ச நாளா திரைப்படங்



# மேகலை போல் மேனியில் சரியும் மென்மலர்க் கூந்தல்

பல நூற்றாண்டுகளாகப் பலனளித்து வரும் மருதோன்றி, செம்பருத்தி, கீழாநெல்லி, கரிசலாங்கண்ணி மற்றும் 25 மூலிகை மருந்துகள், தேங்காய் எண்ணெய், ஆலிவ் எண்ணெய், பசும்பால் ஆகிய இயற்கை ஊட்டச் சத்துக்கள் கொண்டது டாம்ப்கால் மூலிகைக் கூந்தல் தைலம்.

உங்கள் கூந்தல் அடர்ந்து, நீண்டு, மென்மையாகச் செழித்து வளரவும், இளநரை, பொடுகு, பேன் ஆகியன அகலவும் தொடர்ந்து டாம்ப்கால் மூலிகைக் கூந்தல் தைலம் பயன் படுத்துங்கள்.




## டாம்ப்கால்

மூலிகை கூந்தல் தைலம்

தமிழக அரசு நிறுவனத் தயாரிப்பு

TAMPCOL/26 1/DIPR/1 54/MS/88/CANCO





களில் டீச்சர்களை அவமதிக்கிற மாதிரி காட்டறாங்க.

கீதா: டி.வி.யில் காட்டக்கூடாது. அதோடு எல்லா நிகழ்ச்சிகளையும் குழந்தைகளோடு சேர்ந்து பார்க்கும்படி இல்லை.

ஹேமா: குழந்தைகள் அவர்கள் வயதுக்கு மீறி எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் படியான நிலைமை உருவாகி விட்டது.

மிஸஸ் தேவராஜ்: குழந்தைகளுக்குத் தனி சானல் டி.வி. யில் வேண்டும். அவர்களின் கற்பனைத் திறனை அதிகரிக்க அந்த நிகழ்ச்சிகள் வேண்டும். அது குழந்தைகள் உலகமாக இருக்க வேண்டும்.

ஹேமா: வன்முறை, சண்டைகள் இல்லாத நிகழ்ச்சியாக இருக்க வேண்டும்.

மார்க்ரெட்: வெறும் கல்வியினைத் தந்து பிரயோசனமில்லை. ஆசிரியர்கள் மாணவனை உருவாக்குவதிலே பெரும் பங்கு உண்டு.

ஹேமா: ஆசிரியர்கள் தங்கள் அறிவை பெருக்கிக் கொள்ள வேண்டும். தினமும் படிக்க வேண்டும்.

சரோஜினி: அப்புறம் இந்த தண்டனை இருக்கிறதே அது ரொம்பத் தப்பு.

சிவராஜ்: சில பள்ளிகளில் வெயிலில் வாட வைக்கிறதைப் பார்க்கச் சகிக்கலை.

ஹேமா: மற்றவர்கள் முன் பெறும் தண்டனைகள் குழந்தையின் மனதை நோக வைக்கிறது.

கமலா: தனியாக் கூப்பிட்டு சொன்னால் ஏற்றுக் கொள்கிறார்கள். பலனும் இருக்கு.

சரோஜினி: இந்த மாணவர்களுக்கு கோடை விடுமுறையில் தான் நிறைய நேரம் இருக்கிறது. பெற்றோர்களால் எங்கும் அழைத்துச் செல்ல முடியாத பொழுது அவர்கள் தீய வழியில் இறங்க நேரிடுகிறது. இதற்குப் பதிலாக லயன், ரோட்டரி கிளப்புகள் மாணவர்களை சேவை மனப்பான்மைக்குத் தயார் பண்ணலாம்.

ஒரு ஆஸ்பத்திரியில் நோயாளிக்குக் கடிதம் எழுதுவது, கண்ணிழந்த மாணவர்களுக்குப் படித்துக் காட்டுவது, அவர்களுக்குப் பரீட்சை எழுதுவது, முதியோர் இல்லத்தில் அவர்களுக்கு படித்துக் காட்டுவது என்று எத்தனையோ செய்யலாம். வயது முதிர்ந்தவர்களுக்கு சிறுவர்களை எப்பொழுதும் பிடிக்கும். அவர்களும் நல்வழிப் போதனைகளை மாணவர்களுக்குச் சொல்வார்கள். இப்படி பண்ணுவதால் மாணவர்கள் நமக்கு எத்தகைய வசதிகளை ஆண்டவன் அளித்து இருக்கிறான் என்று நினைக்கையில் போதை மருந்து நாடுவது, தீய வழியில் இறங்குவது போன்றவற்றைத் தவிர்ப்பார்கள். கஷ்டப் படுபவர்களைப் பார்க்கையில் உண்மையிலேயே இவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற யோசனை வரும். சேவை மனப்பான்மை வளரும்.

சிவராஜ்: சென்ஸஸ் எடுக்கிறதுக்கும், ரேஷன் கார்டு விபரத்திற்கும் ஆசிரியர்களைப் போகச் சொல்லுகிறார்கள். அதற்குப் பதிலாக வேலையில்லாப் பட்டதாரிகளை அனுப்பினால் அவர்களுக்கும் வருமானம் கிடைக்கும். ஆசிரியர்களுக்கும் ஓய்வு கிடைக்கும்.

மிஸஸ் தேவராஜ்: ஆசிரியர்களை இம் மாதிரி பணியில் ஈடுபடுத்தவே கூடாது.

ஹேமா: ஆசிரியர்களும், பெற்றோர்களும் கை கோர்த்து நடந்தால் சாதிக்க முடியாதது ஒன்றும் இல்லை.

பேட்டி: **பூங்கோதை குருதாஸ்**

படங்கள்:

**லதா போட்டோ ஸ்டுடியோ**

---

போளி தட்டும் போது சிலருக்கு ஓரங்களில் மாவு ஒதுங்கிவிடும். சாதாரணமாக மாவைச் சிறிதளவு பரத்திக் கொண்டு பூரணத்தை உருண்டையாக வைத்து மாவால் மூடுவார்கள்.

பூரணத்தை உருண்டையாக வைப்பதால் மாவை இழுத்து மூடும் போது மாவு பக்கங்களில் அதிகமாகவும், மேற்புறம் கம்மியாகவும் ஆகிவிடும். இதுவே தட்டும்போது ஓரங்களில் மாவு ஒதுங்கக் காரணம். பூரணத்தை உருட்டி வைத்தபின், அதை வடை போலத் தட்டையாகத் தட்டி வைத்தால், மாவால் மூடும் போது பூரணத்தின் மேற்புறமும் கீழ்ப்புறமும் மாவு சமமாக இருக்கும். போளி தட்டும்போது எத்தனை பெரிதாகப் பரத்தினாலும் மாவு ஒதுங்காது.

— சாந்தா.



# அம்மா 'டயட்'டில் இருக்கிறாள்

எங்கம்மா கல்யாணம் ஆன புதிதில் கொடி போன்ற உடலமைப்புடன் இருப்பாளாம். அப்பா சொல்வார்.

நானும், எனக்கு இரண்டு வருடத்திற்குப் பின்பு தம்பியும் பிறந்த பின் உடல் பெருத்து விட்டது. அம்மா மறுபடியும் இளைக்கப் பல வருடங்கள் மிகவும் முயற்சி செய்தாள்.

முதலில் அவள் உடல் எடை கூடியதற்குக் காரணம் என் பாட்டிதான். என் தம்பி பிறந்த பொழுது அம்மாவுக்கு சிஸேரியன் ஆபரேஷன் செய்ய வேண்டியதாகிவிட்டது. புண் சரியாக ஆறுமல் அவள் பூரண குணமடைய மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. அப்பொழுது பாட்டி இருந்தார். அம்மாவைப் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே விடாமல், குழந்தை அழும் போதெல்லாம் கூட, தானே கவனித்துக் கொண்டான்.

பிள்ளை பெற்ற உடம்பு தேற வேண்டும், குழந்தைக்கு எடுத்து விடுகிறாள் என்று நிறையப் பாலும், நெய்யும் பழங்களுமாகப் போஷாக்காகக் கவனித்துக் கொண்டாள்.

அப்பொழுது உடலில் ஏறியதுதான் அந்த அதிகப்படியான 15 கிலோ, இன்னமும் அம்மாவால் அதைக் குறைக்கவே முடியவில்லை.

நாங்கள் குழந்தைகளாக இருந்தபொழுது அம்மாவுக்கு எங்களுடனேயே, வேலை சரியாக இருக்கும். தனக்கென்று 'டயட்'டைப் பற்றிக் கவனிக்கவோ, உடற்பயிற்சி செய்யவோ நேரம் இருக்காது. எப்பொழுதும் வேலை இருப்பதால்,

சரியாகச் சாப்பிடாமல் இருந்தால் உடம்பு வெலவெலத்து வந்துவிடும் என்ற பயம்.

ஆனால் தன் உடல் எடையைக் குறைக்க வேண்டும் என்ற எண்ணம் மட்டும் அம்மா மனத்தில் நிரந்தரமாக இருக்கும். நூலகத்திற்குப் போய்ப் புத்தகம் எடுத்து வந்தால் அதில் ஒன்றுவது உடல் எடையைக் குறைப்பது பற்றியதாக இருக்கும். அதனால் நாங்கள் கூட, அவளுக்கு அது பிடிக்கும் என்று அது போன்ற புத்தகத்தை, அவளுக்காகக் கொண்டு வந்து கொடுத்து, அவள் பாராட்டைப் பெற்றிருக்கிறோம்.

ஒவ்வொரு கிலோ அதிகப்படியான உடல் எடையும் இருதயத்திற்கு எவ்வளவு அதிகமாக டன் வேலை கொடுக்கிறது. முதுகெலும்பு எவ்வளவு எடையைத் தூக்குவதற்குச் சமம் போன்ற ஆதாரபூர்வமான விஞ்ஞானச் செய்திகள் எல்லாம், அம்மாவுக்கு அத்துப்படி.

சாப்பிடவேண்டும்போல்எண்ணம்இருக்கும்பொழுது, வேறு எதிலாவது மனத்தைச் செலுத்து, என்ற அறிவுரையை அம்மாவால் பின்பற்ற முடியாததற்கு, வீட்டில் நாங்கள் எல்லோரும் காரணம். எங்கள் குடும்பத்தில், அப்பா, தம்பி, நான் எல்லாம் ஒரு ரகம். என்ன சாப்பிட்டாலும் பெருக்காமல், இன்னமும் கொண்டுவா என்று கேட்கும் ரகம். அதுவும் வளரும் பருவத்தில் தம்பியும், நானும் சாப்பிட்டதற்கு ஓர் அளவே இடையாது. ஒரு நாளைக்கு நான்கு வேளை சாப்பிடுவோம். நடுவில் பட்சணங்கள், பிஸ்கெட், பழங்கள் என்று நிறையக் கொரிப்போம்.

நாங்கள் இன்றைய தலைமுறைக் குழந்தைகள். எங்களுக்கு நூடுல்ஸ், கேக், பிஸ்கட்ஸ், பிஸ்ஸா எல்லாம் பிடிக்கும். சர்க்கரைப் பொங்கல், பூரி — சோளே, பஜ்ஜி, சமோஸாவும் பிடிக்கும்.

அப்பாவுக்கு நன்றாகத் தேங்காய் வறுத்துப் போட்ட பூசணிக்காய்க் கூட்டும், நிறைய எண்ணெய் விட்டுச் சுண்ட வதக்கிய பாகற்காய்க் கறியும், பூப்பூவாக இட்லியும் ரொம்பப் பிடிக்கும்.

அம்மாவுக்கு தினமும் இரண்டு விதமான சமையல் செய்ய வேண்டியிருக்கும்.

எப்படி உணவிலிருந்து கவனத்தைத் திசை திருப்ப முடியும்?

இதற்கு நடுவில், தனக்கென்று, எண்ணெய், நெய், சீஸ், மாவு, சர்க்கரை சேர்க்காத தனிச் சமையல் எப்படிச் செய்ய முடியும்?

பஜ்ஜி, எண்ணெய் சாப்பிடப் போவதில்லை என்பார். எல்லோருக்கும் பரிமாறிய பின் தூளாகக்கொஞ்சம்தட்டில்இருப்பதைத் தான் வாயில் போட்டுக் கொள்வார்.

இட்லி தனக்கென்று வார்க்க மாட்டார். ஆனாலும் மற்றவர் கேட்டால் இல்லை என்று சொல்லக் கூடாதே என்று தாராளமாகவே செய்திருப்பார். எப்படியாவது நாலு இட்லி மிஞ்சிவிடும். கடச்கட பூவான இட்லி சாப்பிடாமல் இருக்க முடியுமா?

வடை செய்யும்பொழுது உப்பு போறுமா என்று பார்க்க, உள்வரை வெந்திருக்கிறதா, என்று பார்க்க ஒன்று சாப்பிடுவாள். சில சமயம் 'ஷேப்' சரியாக வராததையும் வாயில் போட்டுக் கொள்வாள்.

மைசூர் பாகு செய்தால், துண்டம் போட்டு எடுத்து வைத்தபின், தட்டில் உள்ள பொடியைத்தான் சாப்பிடுவாள்.

அதிகம் பால் சேர்த்துக் கொள்ளக் கூடாது. ஒரு நாளைக்கு மொத்தம் அரை டம்ளர்தான் சேர்த்துக் கொள்ளலாம் என்று எங்கேயாவது படிப்பாள். தனக்கென்று, நீர் மோரும், தண்ணியாகமயும்போட்டுக்கொள்வாள். நீர்மோரில் இஞ்சி, கறிவேப்பிலை கரைத்து, மேயில் ஏலக்காய் பொடித்துப் போட்டு என்று ரொம்ப வாசனையாக இருக்கும். நாங்கள் எல்லோரும் பங்கு கேட்போம். அதனால் ஒரு பெரிய அடுக்கு நிறைய, நீர் மோர் செய்வதும், ஒரு வேலையாக ஆகிவிடும்.

ஒருநாள் காலை உணவிற்கு முளை பயிர் என்பார். மற்றொரு நாள் ஸ்விஸ் டாக்டர் ஒருவர் சொன்ன 'ஓட்ஸ் மியூஸ்லி' என்பார். அம்மா எது செய்தாலும் ருசியாக வாசனையாகச் செய்வார்.

நாங்கள் எல்லோரும், இட்லியையும் சாப்பிட்டுவிட்டு, டோஸ்ட்டையும் சாப்பிட்டு விட்டு, அதையும் சாப்பிடுவோம்.

அம்மா வெறும் முளைபயிறை மட்டும் சாப்பிடுவதைப் பார்க்கப் பாவமாக இருக்கும்.

மூன்று நாட்கள் இப்படிச் சாப்பிட்டிருப்பார். அதற்குள் 'இஸ்ரேலிக் ஆர்மி டயட்' பற்றிப் படித்திருப்பார்.

இந்த டயட்டில் ஏழு நாட்களுக்கு சிக்கனும், ஆப்பிளும்தான் ஆகாரமாம்.

முதல் நாள் முதல் வேளை சாப்பிடும் பொழுது ருசியாக இருக்கும் தின்பண்டம் மூன்றும் வேளையே அலுத்துப் போய்விடும். இரண்டாம் நாளே பிடிக்காமல் போய்விடும். அதனால் சாப்பிடும் அளவு குறைந்து, உடல் இளைக்க ஆரம்பித்து விடுமாம்.

ஆனால் பிடித்தமான உணவு இருந்தும், சாப்பிடப் பிடிக்காமல் போவது எரிச்சலை உண்டு பண்ணும். கோபத்தைத் தூண்டும்.

இப்படி ஒரு வாரம் இருந்த படைவீரர்களை அரபு நாட்டுடன் சண்டைக்கு அனுப்பித்தான் யுத்தத்தில் ஜயிப்பார்களாம்.

இதைப் படித்ததும் அம்மாவுக்கு, தான் சில சமயம் குழந்தைகளிடம் கோபித்துக் கொள்வதும் இதனால்தானோ என்று தோன்றும். உடனே டயட்டை நிறுத்தி விடுவார்.

காலையில் எழுந்ததும் வெந்நீரில் எலுமிச்சம்பழம் பிழிந்து தேன்விட்டுக் குடித்தால் உடல் இளைக்கும் என்பார்கள் என்று குடிக்க

> **அடைக்கு பருப்புகளை நனைக்கும் போது வெள்ளை உளுந்திற்குப் பதில் கறுப்பு உளுந்தை நனைத்து அரைத்து அடையோ குணுக்கோ செய்தால், எது வானாலும் மிகவும் ருசியாக அமையும். ருசியை நீங்கள் செய்து பார்த்து விட்டு உணர்வீர்கள்.**
>
> — ஜி. இந்திரா.

மங்கல
சௌபாக்கியத்தின் சின்னம்

ஐடெக்ஸ்
குங்குமம் டீலக்ஸ்
matt finish




ஐடெக்ஸ்
48 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த் லாபரடரீஸ் சென்னை 600033

Imageads 2510

ஆரம்பிப்பார். தேனில் இருக்கும் சர்க்கரையை உடல் கொஞ்சம் கொஞ்சமாக மெதுவாகக் கிரகித்துக் கொள்வதால் சீக்கிரம் பசிக்காதாம். இதனால் சிலர் இளைப்பார்களாம். அம்மா அதையும் காலை ஆகாரத்துடன் சேர்த்துக் கொண்டதுதான் மிஞ்சியது. உடல் இளைக்கவில்லை.

பாவம் அம்மா. அவள் இளைக்க முயற்சிக்கவில்லை என்று சொல்லவே முடியாது.

அம்மாவே தன் உடல் இளைக்க இவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ளும் பொழுது, தன் எடை அதிகம் என்று நினைக்கும் பொழுது, நாங்கள் யாரும் அவளை 'நீ குண்டாக இருக்கிறாய்' என்று சொன்னதேயில்லை.

இதற்காக அம்மா உடற்பயிற்சி வகுப்பில் சேர்ந்தார். உடற்பயிற்சி செய்தால் உடல் இளைக்கும், என்று தான் வகுப்பில் சேர்ந்தார். ஆசையாக சல்வார் கமீஸும் தைத்துக் கொண்டார்.

கிளாஸுக்குப் போய்விட்டு வந்தாலே அம்மாவுக்குக் கபகபவென்று பசிக்கும். ஒரு ஸ்லைஸ் கேக்கும் ஒரு கப் பாலும் சாப்பிட்டால்தான் அம்மாவுக்கு மேற்கொண்டு வேலை செய்ய முடியும். ஆறு மாதங்கள் கிளாஸுக்குப் போய் வந்தாள். ஒரு மாற்றமும் இல்லை.

அதற்குள் என் திருமணம் நிச்சயமாகி விட்டது. அம்மாவுக்குக் கிளாஸுக்குப் போக நேரமில்லை. விட்டு விட்டார்.

என் கல்யாணத்தில் அம்மாவின் அழகைப் புகழாதவர்களே கிடையாது. பளிச்சென்று, கம்பீரமாக, சபை நிறைந்து, பழக்கமில்லாத மடிசார் புடைவையிலும் பாந்தமாக இருந்தவர், அம்மாதான்.

அம்மாவுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் தெரியாமல் ஒரே மாதிரி உடல் வாகுடன் நாங்கள் இல்லை. 'இது பெண்ணோட அக்காவா?' என்று கேட்டு யாரும் தர்ம சங்கடத்துக்குள்ளாக்கவில்லை.

என்னைக் கூடப் பெண் பார்க்க வந்த என் வருங்கால மாமியார், நானும் பின்பு உடல் தேறிவிடுவேன் என்ற நம்பிக்கையில், தான் சம்மதித்தாராம். (ஆனால் அந்த நம்பிக்கை இன்னமும் கைகூடவில்லை.)

என் கல்யாணம் ஆன பின்பு தம்பியும் படிக்க வேறு ஊருக்குப் போய்விட்டான். அப்பாவும் அம்மாவும் திடீரென்று தனியாக விடப்பட்டார்கள். அம்மாவுக்குப் பழக்க தோஷம் ஏதேனும் பட்சணங்கள் செய்யத் தோன்றும். அப்பாவும் அதே பழக்கத்தில் பழங்களும், பிஸ்கெட்டும், சாக்லேட்டும் வாங்கி வருவார்.

அம்மா தான் இனி இளைக்க முடியும் என்ற நம்பிக்கையையே கைவிட்டு விட்டார். ஆனாலும் அவரின் இத்தனை வருட முயற்சியினாலோ என்னவோ மேலும் மேலும் எடை கூடாமல் அதே நிலையில் இருந்தார்.

எனக்குக் குழந்தை பிறந்து, அந்தக் குழந்தை, என் மடியை விடப் பாட்டியின் மடிதான் மெத்தென்றிருக்கிறது என்று அவள் மடியில் போய் ஆசையாகப் படுத்துக் கொள்ளும்பொழுது, பெருமிதத்தில் இனி இளைக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தீர்மானித்து விட்டார்.

ஆனால், அது போய் இப்பொழுது எனக்கும் பேரன் பிறப்பதற்குள், அம்மாவைப் போல் லேசாக, உருண்டையாகப் பூசினாற் போல் இருக்க மாட்டோமா? என்று ஆசையாகஇருக்கிறது. அம்மாவைப்போன்றவர்களின் ஆதங்கத்திற்கு ஒரு வார்த்தை— **shapely** —யான பெண்களை எல்லோரும் ரசிப்பார்கள், என்றாலும் **homely** —யான பெண்ணைத்தான் விரும்புவார்களாம்.

— ஜெயா. வி. ராமன்.

---



சென்னையில் உள்ள ஒரு பிரைவேட் பள்ளியில் ஆசிரியையாக இருந்த போது, மாணவர்களை எப்போதும் ஆங்கிலத்தில் பேச தூண்ட வேண்டும் என்று சொல்லி இருந்தார்கள்.

ஒரு நாள் நான்காம் வகுப்பில் ஆங்கிலப் பாடம் நடத்திக் கொண்டிருக்கும் போது கடைசி பெஞ்சில் ஏதோ சலசலப்பு. நான் 'என்ன அங்கு கலாட்டா' என்று கேட்டேன். ஒருவன் எழுந்து "அவன் தான் என்னை ..." என்று தமிழில் ஆரம்பிக்க, நான் "ஆங்கிலத்தில் தான் பேச வேண்டும் என்று எத்தனை முறை சொல்வது?" என்று கூற உடனே அவன் "சரி மிஸ், அவன் என்னை 'சனியனே' என்று திட்டினான். சனியனுக்கு ஆங்கிலத்தில் என்ன?" என்று கேட்க நான் என்னை மறந்து சிரித்து விட்டேன்.

— ராதா விட்டல்.





ஆப்பிரிக்க நாடுகளில் ஒன்றான ஜாம்பியாவில் எட்டு வருஷங்களைக் கழித்த எனக்குச் சில விசித்திரமான அனுபவங்கள் ஏற்பட்டதுண்டு. ஆப்பிரிக்கா என்றதும் யாருக்கும் உடன் ஞாபகத்துக்கு வருவது சின்ன வயதில் படித்த, "இருண்ட கண்டம்," "தடித்த உதடும், சிறிய மூக்கும், பெரிய வாய், கறுப்பு ஜனங்கள்" என்பதும்தான். ஜாம்பியா,

# துப்பாக்கி முனையில் நிறுத்துவார்கள்!

ஜிம்பாப்வே போன்ற ஒன்றிரு நாடுகளுக்குச் சென்று, அங்குள்ள அன்பான மனிதர்களையும், பசுமை வளம் மிகுந்த இடங்களையும் பார்க்க நேரும் பொழுது "ஏன் இம்மாதிரி எண்ணங்களை இன்னமும் வைத்துக் கொண்டிருக்கிறோம்" என்று நம்மை நாமே வியந்து கொள்வதும் உண்மைதான்.

அன்பாகவும், அழகாகவும் பேசும் மனிதர்களும், மரியாதையாகவும் இனிமையாகவும் பழகுபவர்களும் உள்ள இந்த ஜாம்பியர்களின் மனத்தில் மகாத்மா காந்தியும் இந்திரா காந்தியும் ஆழப் பதிந்தவர்கள்.

ஜாம்பியாவின் பள்ளிகளின் பாட முறையும், பாடப் புத்தகங்களும் ஒன்று போல் நாடு முழுவதும் ஒரே மாதிரியாகக் கையா

ளப்படுவது ஆச்சரியமாகவே உள்ளது. பள்ளிகளை அரசாங்கம் நடத்துவதால் ஒரே சீரான முறையில் நடத்திவர சுலபமாகிறது. விடுமுறை நாட்களும், பள்ளிகள் திறந்து மூடுவதும்கூட ஒன்று போல் நடத்தப்படுகின்றன. வேலை மாற்றல் ஆகி, அவ்வப்பொழுது ஊர்கள், இடங்கள் மாறிப்போகும்



பெற்றோர்களுக்கு இம்முறைகளினால் பலன்கள் பல உண்டு. பள்ளிகள் மாறினாலும் பாடப் புத்தகங்கள் மாறுவதில்லை. மறுபடியும் அலைந்து திரிந்து புதுப் புத்தகங்கள் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. குழந்தைகளுடைய விடுமுறைகளை ஒட்டிப் பெற்றோர்கள் தங்கள் லீவு நாட்களை எடுத்துக் கொண்டு தாய் நாட்டுக்கோ, மற்ற இடங்களுக்கோ சென்று வர முடிகிறது.

அடுத்து, தினமும் நமக்குத் தேவைப்படும் பால், தயிர், வெண்ணெய், எண்ணெய் முதலிய சாமான்கள் கலப்படம் எதுவுமின்றி, ஒரே மாதிரியான விலையில், எல்லா ஊர்களிலும், எந்த கடையில் ஏறி இறங்கினாலும் மாறுபடாது கிடைப்பது ஆச்சரியத்தை அளித்தது.

இந் நாடுகளில் வாழும் ஜனங்களது தெளிவான மனமும், எதையும் பெரிதாகத் தலையில் போட்டு அலட்டிக் கொள்ளாமல், மிகச் சாதாரணமாகவே எடுத்துக் கொள்ளும் சுபாவமும் வரவேற்கத்தக்கது. "பையன் படித்து பாஸ் செய்ய வேண்டுமே, அப்பொழுதுதான் காலேஜில் இடம் கிடைக்கும்'' என்றெல்லாம் அவர்கள் கவலைப்படுவதில்லை. சர்வ சாதாரணமாக ''பாஸ் செய்யா விட்டால் அடுத்த வருடம் பாஸ் செய்துவிட்டுப்போகிறான். அதனால் என்ன?'' என்று சொல்வதைக் கேட்கும்பொழுது நம் ஆச்சரியம் பல மடங்கு ஆகிறது. சில சமயங்களில், 'இம்மாதிரி மனப் பக்குவம் நமக்கும் இருந்தால் தேவலை போலிருக்கே' என்றே தோன்றுகிறது! வருஷத்துக்குச் சாமான்களை வாங்கிப் போடுவதோ, காலேஜ் அட்மிஷன்களுக்கு அலைந்து திரிவதோ, அவர்களது அகராதியிலேயே கிடையாது. அன்



றுடம் பீர், கொகோ கோலா கிடைத்தால் திருப்தி அடையும் இந்த ஜனங்கள் எதைப் பற்றியுமே கவலைப்படாமல் எளிமையாக வாழும் 'சிம்பிள்' மனிதர்கள்!

மற்றொரு முக்கிய விஷயம் என்னைக் கவர்ந்தது இங்கெல்லாம் உள்ள ஒழுங்கும், கட்டுப்பாடும் அமைந்த போக்குவரத்து. நகரங்களின் பல வீதிகளில் நூறாயிரம் வாகனங்கள் அழகாகவும் ஒரே சீரான பாதைகளில் நிதானமாகவும், 'பாம்' 'பூம்' என்ற 'ஹாரன்' ஒலிகள் எதுவுமின்றிச் செல்லும் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஏதாவது வழி தெரியாமல் அல்லது சந்தேகத்தில் இடம் அல்லது வலம் திரும்புவதற்காகச் செய்கை காட்டி, திரும்பாமல் நேரே சென்றால், உடன் பின்னாலிருந்து 'ஹாரன்' சத்தம் கேட்கும்! பக்கத்து வண்டிகளிலிருந்து தலைகளும் திரும்பும். "என்ன, ஊருக்குப் புதுசா?" என்ற கேள்வியும் கேட்டு விட்டுப் போவார்கள். மற்றபடி வேகமாக ஓட்டினால் ராடார் மூலம் அறிந்து கொள்வதால், கார்களை நிறுத்தி உடன் அபராதம் வாங்குகிறார்கள். நிறுத்தாமல், ஓடிவிட முடியாது. அப்படி கவனிக்காமல் அல்லது நிறுத்தாமல் ஓடிவிடப் பார்த்தால் துப்பாக்கி முனையில் நிறுத்தி விடுகிறார்கள்!

நம் நாட்டில் இந்த கலாசாரம் எல்லாம் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

**— எச். ஆர்.**

நெல்லிக்காய், மருதாணி, செம்பருத்தி பூ, கறிவேப்பிலை இவைகளை சேர்த்து நன்கு அரைத்து, வடையாக தட்டி வெய்யிலில் காய வைத்து எடுத்து வைத்துக் கொண்டு மாதா மாதம் தேங்காய் எண்ணெயை காய்ச்சி அத்துடன் இந்த வடையைச் சேர்த்து காய்ச்சி இறக்க வேண்டும். பிறகு வடையை எடுத்து விட்டு, இந்த எண்ணெயைத் தினம் தடவி வர 6 மாதத்தில் மாற்றத்தை உணரலாம். கருகரு வென்று முடி வளரத் தொடங்கும். என் அனுபவத்தில் கண்ட உண்மை.

— ராஜலட்சுமி.



# ஸ்பெஷல் கிளாஸ்

உஷாஜான்

"ஆனைக்குப் புரிஞ்சுதா, எனி டவுட்?"—கரும்பலகையில் கணக்கினைப் போட்டு விட்டு நிமிர்ந்த பூரணி கேட்டாள்.

"நோ டவுட் மிஸ்"—மாணவியர் கோரஸாகக் கத்தினர். புன்முறுவலுடன் தன் இருக்கையில் அமர்ந்தாள்.

மணி அடித்து, மாணவியர் கலைந்து சென்றனர்.

'தப்பே இல்லாமல் வகுப்பில் கணக்கு போடும் நான் வாழ்க்கையில் எங்கே தவறினேன்? எப்படி என் கணக்கு எங்கே தவறியது?'

நேற்று நடந்த சம்பவம் மண்டையில் இடியாய்த் தாக்கியது. ஒன்றுமில்லை, விஷயம் சாதாரணமானதுதான். பூரணி வீட்டுக்குச் செல்லும்போது மணி ஐந்தரையாகி விட்டிருந்தது. வீடு பூட்டியிருந்தது. வழக்கமாக அவள் மகன் ராஜா வந்திருப்பான். அவனிடமும் ஒரு சாவியிருக்கும். அன்று அவன் வீட்டில் இல்லை.

பூரணி உள்ளே சென்று, ஃப்ரிஜ்ஜில் இருந்த பாலை சுட வைத்து காப்பி கலந்தாள். ராஜாவுக்காக காப்பியை ஃப்ளாஸ்கில் ஊற்றி வைத்தாள். காலையில் வைத்து விட்டுப் போன குழம்பையும், கறியையும் சூடு செய்தாள். பின்னர் முகத்தைக் கழுவி, லேசாக பவுடர் தடவி, ஒரு பொட்டை வைத்தாள்.

மணி ஏழாகவும், பயம் லேசாக வயிற்றைக் கலக்கியது.

'என்ன, இன்னமும் வரவில்லையே?'

வாசலுக்கு வந்தாள். எதில் வீட்டில் ராஜாவுடன், அதே பள்ளியில் படிக்கும் சேகர் நிற்பது தெரிந்தவுடன்,

'சேகர், ராஜா இன்னும் வரலைப்பா, உங்கிட்ட ஏதாவது சொன்னானா?' என்று கேட்டாள். அவன் பதில் சொல்வதற்கு முன் ராஜாவே வந்து விட்டான். வாசலிலேயே பூரணி நிற்பதைக் கண்டவுடன் முகம் சிவக்க, விறுவிறுவென்று உள்ளே நுழைந்தான்.

"நான் பயந்தே போயிட்டேம்மா, ஏன் இவ்வளவு லேட்?" சாதாரணமாகத்தான் கேட்டாள் பூரணி.

ராஜா பதில் சொல்லவில்லை. புத்தகப் பையை படாரென்று விசிறியடித்தான். அவன் செய்கையால் அதிர்ந்தாள் பூரணி. இதுவரை இம்மாதிரி அவன் எதுவும் செய்ததில்லை.

"ஏம்பா, உடம்பு சரியில்லையா?" பரிவுடன் நெற்றியில் கை வைத்தாள்.

"நோ, ஐயாம் ஆல்ரைட்.. இன்னிக்கு ஒரு நாள் நான் லேட்டா வந்ததுக்கு இவ்வளவு கேள்வி கேக்கறீங்களே, எத்தனை நாள் நான் தனியா வந்து, பைத்தியக்காரனாட்டம் இங்க உக்காந்திட்டு இருந்திருக்கேன்.. இப்ப உடம்பு நல்லாத்தான் இருக்கு. ஆனா, எத்தனை நாள் நான் ஜுரத்தோட வீட்டுக்கு வந்திருக்கேன். அப்பெல்லாம் நீங்க என்ன பக்கத்திலயா இருந்திருக்கீங்க?"

பூரணி விக்கித்து நின்று விட்டாள். அவன் கூறுவது அத்தனையும் உண்மைதான். இதே கேள்வியைத்தான் அன்று ராஜாவின் தந்தை கேட்டான். அன்று அப்பன், இன்று மகன்...

இப்படி ஆரம்பித்த சிறுசிறு மனஸ்தாபங்கள்தான் கடைசியில் பூதாகாரமாகி பூரணியை கணவனிடமிருந்து விலக்கியது. அவள் கணவன் இன்று வெளிநாட்டில் யாரையோ திருமணம் செய்து கொண்டு வாழ்வதாக அவள் காதுகளில் செய்தி எட்டியது. தன் வாழ்க்கையின் ஆதாரமாக அவள் ராஜாவைத்தான் நினைத்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்குப் பள்ளி நேரம் மாலை நான்கு மணி வரைதான். ஆனால், அதற்குப் பிறகும் ஒரு மணி நேரம் பள்ளியில் 'ட்யூஷன்' எடுத்தாள். அது மட்டுமன்றி, சந்தேகம் கேட்டு வரும் மாணவியருக்கும் பொறுமையுடன் விளக்குவாள். மற்ற ஆசிரியைகள் போல, மணியடித்தவுடன் ஓட அவளால் முடியாது. மாணவியருக்கும் அவளிடம் ஒட்டுதல் அதிகம். வீட்டுப் பிரச்னைகளைக் கூட அவளிடம் மனந்திறந்து பேசும் மாணவியர் எத்தனையோ பேர். அவள் அந்தப் பணியை மதித்தாள், மாணவியரின் உணர்ச்சிகளை மதித்தாள். அதே நேரத்தில் ராஜாவுக்கும் குறை வைக்கவில்லை அவள். அவனும் 'அம்மா, அம்மா' வென்று அவளையேதான் சுற்றி வந்து கொண்டிருந்தான். சில நாட்களாகத்தான் அவன் போக்கில் சிறு மாறுதல்... இன்று

அவன் மனம் புரிந்ததும் பூரணி திகைத்து விட்டாள்.

''ராஜா... நீ சொல்றது வாஸ்தவம்தான். நான் ஒத்துக்கறேன்... ஆனா...''

''போதும்.. எந்தவித விளக்கமும் எனக்குத் தேவையில்லே, அதை நான் எதிர்பார்க்கவுமில்லே...'' ராஜா விருட்டென்று எழுந்து உள்ளே போய் விட்டான். அன்றிரவு இருவருமே சாப்பிடவில்லை.

கண்களின் கண்ணீர் கன்னத்தில் வழிந்து மேசையின் மேல் வைத்திருந்த புத்தகத்தில் பட்டுத் தெறித்ததும் சுய உணர்வு பெற்ற பூரணி, தான் அழுததை யாராவது பார்த்திருப்பார்களோ என்ற ஐயத்துடன் சுற்று முற்றும் பார்த்தாள். நல்ல வேளை! யாரும் அங்கில்லை.

''நல்ல டோஸ் கொடுத்தேடா உங்கம்மாவுக்கு... வெல்டன்'' ராஜாவின் கைகளைப் பிடித்துக் குலுக்கினான் சுரேஷ்.

பக்கத்தில் நண்பர் பட்டாளம்! ஒரு ஹீரோவைப் போல நடுவில் ராஜா!

''வேலைக்குப் போற அம்மாக்களையெல்லாம் ஷூட் பண்ணணும்டா...'' என்று பல்லைக் கடித்தான் பாஸ்கர். வீட்டில் அவன் தாய் அவனைக் கவனிப்பதில்லையே என்ற கடுப்பு அவனுக்கு.

''சரி. விடுங்கடா.. இன்னிக்கு நம்ப சூரஜோட பர்த்டே. சாயந்திரம் வீட்டுக்குக் கூப்பிட்டிருக்கான். போகலாமா, வேண்டாமா?'' என்றான் சுரேஷ்.

ராஜாவுக்கு மனத்தில் லேசாக உறுத்தல். நேற்றுதானே எடுத்தெறிந்து பேசினேன்.. இன்று....?

''ஏய், என்னடா யோசனை?''

''ஒண்ணுமில்லே, இன்னிக்கும் லேட்டா போகணுமா?''

''சரி... அப்ப, இப்பவே கிளம்புவோம். போய் அவனை வாழ்த்திட்டுப் போயிடலாம். ஓகே?''

''ஓகே!''

நண்பர்கள் பட்டாளம் ஆரவாரத்துடன் கிளம்பியது. சூரஜின் வீடு... தவறு தவறு... வீடல்ல அது, அரண்மனை! வாசலில் கூர்க்கா, உள்ளே ராஜபாளையம்! பெரிய தோட்டம், தோட்டத்தின் நடுவில் நீரூற்று... பிரமிப்பாக இருந்தது! இந்திப் படங்களில் வரும் கள்ளக்கடத்தல்காரனின் மாளிகை போல இருந்தது ராஜாவுக்கு.



இவர்கள் உள்ளே சென்றதும், சூரஜ் ஓடி வந்தான்.

"ஹலோ! என்னடா ஆறு மணிக்கு வரச் சொன்னா, நாலு மணிக்கே வந்திட்டீங்க.. தட்ஸ் ஆல் ரைட்..." என்றவன், டெலிபோனை எடுத்து சமையல்காரனிடம் ஏதோ கூறினான். சிறிது நேரத்தில் அனைவருக்கும் சாப்பிட தட்டுகளில் ஏதேதோ வந்தன. சிரிப்பும், பேச்சுமாக நேரம் கழிந்தது.

"எங்கடா, உங்க அம்மா, அப்பா, யாரையுமே காணோம்?" என்று கேட்டான் ராஜா.

"ஒரு நிமிஷம்" என்ற சூரஜ், டெலிபோனை எடுத்தான். மறுநிமிடம் முகம் வாடிப் போய் டெலிபோன் ரிஸீவரை வைத்தான்.

"என்னடா?"

"ஸாரிடா... எங்கப்பா கான்ஃபிரன்ஸுக்காக பாம்பே போயிட்டாராம்.." என்றான்.

"அதனாலே என்னடா?" என்றான் ஆறுதலாய் சுரேஷ்.

"உங்கம்மா எங்கேடா?"

"அவுங்ககிட்டதான் இப்ப பேசினேன். அவுங்களுக்கு இன்னிக்கு எனக்குப் பிறந்த நாள்னு நினைவில்லையாம். அதனாலே, அவுங்களுக்கு ஏதோ புரோகிராம் இருக்காம். ஏன் ஒரு வாரத்துக்கு முன்னாலேயே அப்பாயின்ட்மென்ட் கேக்கலைன்னு கோபப்படறாங்கடா" என்ற சூரஜை வியப்புடன் பார்த்தனர் நண்பர்கள்.

சிறிது நேரத்தில் நவநாகரிக அலங்காரத்துடன் வந்த சூரஜின் அம்மா அவனைத் தாண்டிச் சென்ற போது ஒரு சிறு புன்முறுவலுடன், "டோண்ட் வொர்ரி... அடுத்த வருஷம் கிராண்டா செலிபரேட் பண்ணிடலாம்" என்று சொல்லிக் கொண்டே சென்றாள்.

எந்தவித வசதியும் இல்லாத தன் தாய் தான் தன்னை வளர்க்க, படிக்க வைக்க வேலைக்குப் போகிறாள். செய்யும் தொழிலைத் தெய்வமாக நினைக்கிறாள். அத்தனை வசதி இருந்தும் மகனைப் புறக்கணிக்கும் சூரஜின் தாய் ஒரு புதிராகத்தான் தோன்றினாள் ராஜாவுக்கு.

பளிச்சென்று தன் பிறந்த நாள் நினைவுக்கு வந்தது. காலை நான்கு மணிக்கு எழுந்து, குளித்து, சுவாமி படங்களுக்கு பூப்போட்டு, வீடு முழுவதும் சாம்பிராணி மணக்க, தனக்குப் பிடிக்குமே என்பதற்காக அந்தக் காலை வேளையிலேயே பால் பாயசமும், வெஜிடபிள் பிரியாணியும் செய்து, நண்பர்களுக்குக் கொடுப்பதற்காக சர்க்கரைப் பொங்கல் டிபன் பாக்ஸில் வைத்து, தன்னை எழுப்பி "ஹேப்பி பர்த்டே ராஜா" என்று காதருகில் கூறிய அன்னையின் முகம் மனக்கண்ணில் தெரிய, ராஜா, அதற்கு மேலும் அங்கிருக்க பிடிக்காமல் எழுந்து வெளியே வந்தான்.

வாசலிலேயே பூரணி காத்திருப்பதைக் கண்டு நெகிழ்ந்து போனவன், "ஸாரிம்மா... திடீர்னு ஒரு ஸ்பெஷல் கிளாஸுக்குப் போயிட்டேன்... ரொம்ப நாளாப் புரியாம இருந்த ஒரு பாடம்.. இன்னிக்கு நல்லாப் புரிஞ்சிடுச்சு... ஆமா, இன்னிக்கு என்ன மெனு நம்ம வீட்டு டின்னருக்கு" என்று சிரித்தான்.

பூரணிக்குப் புரியவில்லை. எப்படி இந்த மாற்றம்?

அவளுக்குத் தெரியுமா என்ன, மகன் எந்த 'ஸ்பெஷல் கிளாஸில்' கற்றுக் கொண்டு வந்திருக்கிறான் என்பது?

---




பாடங்கள் எல்லாம் எடுத்து முடித்த பிறகு மீதி இருக்கும் நாட்களில் 'ரிவிஷன்' செய்வது என் வழக்கம். இந்த தடவை நானாகக் கேள்விகள் கேட்டு அவர்கள் பதில் சொல்லாமல் அவதிப்படுவதைத் தவிர்க்க புது வழி கையாண்டேன்.

மாணவர்களையே பாடங்களுக்குக் கேள்விகள் தயாரித்து என் 'கேள்வி வங்கி'க்குத் தந்து உதவுமாறு சொன்னேன். மாணவர்களையே டீச்சராக நடித்து வகுப்பு எடுக்கும் படி கூறினேன். அவர்களையே மாஸ்டர்—மார்க் போடுபவராக இருக்கும்படி செய்தேன். என்ன ஆச்சரியம்! படிக்க சோம்பல் படும் மாணவன் கூட தன் தனித்துவம் தெரிய வேண்டும் என்ற ஆர்வத்தில் பல புத்தகங்களைப் படித்து புது கேள்விகள் பதில்கள் எழுதி வந்து — படிப்பில் நல்ல ஆர்வத்தையும் முன்னேற்றத்தையும் காட்டினான். பெற்றோர்கள்— தலைமை ஆசிரியை என்னை கூப்பிட்டு என் புதுமையான யோசனைக்கு பாராட்டிய போது— இதை பெரும் சாதனையாகவே கருதினேன். மாணவர்களும் மிக நல்ல மதிப்பெண்களை பெற்றார்கள்.

— பிரேமா சந்தானம்.



# தாவண்கெரே

பாஷன் பேப்ரிகஸ்

பிரியா,
மற்றும் பிரேமிகா
டெரின்* புடவைகள்
உங்களுடைய விருப்பத்
திற்கேற்ற
எண்ணற்ற கண்கவர்
வண்ணங்களில்
எழில்மிகு
டிசைன்கள்.

இவைகளும் கிடைக்கின்றன:

- ஷூட்டிங்குகள்
- சர்ட்டிங்குகள்
- டிரெஸ் மெட்டீரியல்கள்
- கேம்பிரிக்
- 2 x 2 ரூபியா
- பூப்போன்ற டவல்கள்

**தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.**
அனுமந்தப்பா கட்டிடம், சித்ரதுர்கா ரோடு, தாவணகெரே-577 002.
ஷோரூம்கள்: காவேரி பவன, பெங்களூர்-560 009.
டாஜிபன்பேட் ஹூப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

*டெரின் கோ:பியின் ட்ரேட் மார்க

T/8788/D/TAM

# சப்பாத்தி ரகங்கள்



## ரூகா, பூல்கா, பரோட்டா, சாதா வகைகள்

மிருதுவான சப்பாத்திக்குக் கோதுமை மாவை முதலில் சலித்து எடுத்துக் கொண்டு உப்புத்தூளை மாவில் தூவிக் கொஞ்சம் தண்ணீரும் கொஞ்சம் பாலும் விட்டுப் பிசைந்து, துவைப்பது போல் அடித்துப் பிசைந்தால் சப்பாத்தி மிருதுவாகவும் ருசியாகவும் நன்ருக வெந்தும் இருக்கும்.

**ரூகா:**

இதற்குச் சப்பாத்தியை வட்டமாக இட்டு தோசைக் கல்லில் மாற்றி மாற்றித் திருப்பி ஈரம் உலர்ந்ததும் (தணலில் காய்ச்சினுல் மிகவும் நல்லது) காஸில் ஸிம்மரில் போட்டு அப்பளம் காய்ச்சுவது போல் காய்ச்ச வேண்டும். இதற்குத் தொட்டுக் கொள்ள சப்ஜி ஏற்றது.

**பூல்கா:**

இதற்கும் சப்பாத்தியை வட்டமாக இட்டு தோசைக் கல்லில் திருப்பித் திருப்பிப் போட்டு ஈரம் உலர்ந்ததும் ஓர் உலர்ந்த துணியால் (கரண்டியால் திருப்புவதானுல் முனை பட்டுக் கிழியாமல் திருப்ப வேண்டும்) ஓரமெல்லாம் ஒற்றிக் கொண்டே வந்தால் பூரி உப்புவதுபோல் கல்லில் சப்பாத்தி உப்பும். அதை எடுத்து ஒரு தட்டில் போட்டு இருபுறமும் டால்டா தடவி எடுக்க வேண்டும்.

**சாதா:**

இருபுறமும் டால்டா விட்டுத் திருப்பித் திருப்பி விட்டு வெந்தபின் எடுக்க வேண்டும்.

**பரோட்டா:**

சப்பாத்தியைச் சிறிய வட்டமாக இட்டு அதில் டால்டா விட்டுத் தடவி மூடி அதை முக்கோணமாக இட்டு டால்டா விட்டுத் திருப்பி வெந்ததும் எடுக்க வேண்டும்.

**பரோட்டா (ஸ்பெஷல்):**

சப்பாத்தியைச் சிறிய வட்டமாக இட்டு மறுபடி ஓரங்களில் கொஞ்சம் இடம் விட்டு மடித்து மடித்து கல்லில் போட்டு டால்டா விட்டு எடுத்தால் பிரிபிரியாக வரும்.

**பரோட்டா (சப்ஜி வைத்தது)**

1. ச. வள்ளிக்கிழங்கு அல்லது உருளைக் கிழங்கை வேக வைத்துத் தோல் உரித்து, நன்ருகப் பிசைந்து கொள்ள வேண்டும். பிறகு கரம் மசாலா, (அ) சாம்பார்ப் பொடி 2 ஸ்பூன், ஒரு சிட்டிகை உப்பு, கொத்துமல்லி இலைகளை வேக வைத்த கிழங்கு மசியலில்

போட்டுப் பிசைந்து உருண்டைகளாக உருட்டி வைத்துக் கொள்ளவும். பின் சப்பாத்தி மாவைப் பிசைந்து, சிறிய வட்டங்களாக இட்டு இந்த உருண்டையை வைத்து மூடி மறுபடி இட்டு, கல்லில் போட்டு டால்டா விட்டு வெந்ததும் எடுக்க வேண்டும்.

பி. கு.: உருண்டைகள் இட்ட சப்பாத்திக்கு அளவாக இருக்க வேண்டும். அல்லது உருண்டை பெரிதாக இருந்தால் இரண்டு மெலிதான சப்பாத்திகளுக்கிடையில் உருண்டையை வைத்தும் இடலாம். கிழியாமல் வரும்.

2. கோஸ் (அ) காலிஃப்ளவர் (அ) முள்ளங்கி இவைகளில் இதைச் செய்யலாம். மேற்கூறியவற்றில் ஏதாவது ஒன்றைக் கொப்பரை சீவியில் சீவி எடுத்துக் கொண்டு அதனுடன் சிட்டிகை உப்பு, கரம் மசாலா, கொத்துமல்லித் தழைகளைக் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். சப்பாத்தியை வட்டமாக இட்டு இந்தக் கலவையை வைத்து மூடி மேலே இன்னொரு சப்பாத்தி வைத்து மூடி தோசைக் கல்லில் டால்டா விட்டு, திருப்பித் திருப்பி எடுக்க வேண்டும். இதேபோல் மற்ற இரண்டிலும் செய்யலாம்.

### சர்க்கரை சப்பாத்தி

சப்பாத்தியை இட்டு விட்டு அதன் மேல் ஒன்றரை ஸ்பூன் சர்க்கரையைத் தூவி ஓர் ஓட்டு ஓட்டிவிட்டு, அந்தப் பக்கத்தைக் கல்லில் போட்டு மறு பக்கத்தில் சர்க்கரையைத் தூவி டால்டா விட்டுத் திருப்பி எடுக்க வேண்டும்.

## சப்ஜி வகைகள் :(வட இந்திய வகைகள்)

### பர்தா:

½ கிலோ பெரிய (பாம்பே) கத்தரிக்காயை நல்லெண்ணெய் தடவித் துவையலுக்குச் சுடுவது போல் சுட்டு எடுத்துக் கொண்டு, புழு நீக்கி உரித்து வைத்துக் கொள்ளவும். ¼ கிலோ தக்காளி, 5, 6 பச்சை மிளகாய், ¼ கிலோ வெங்காயம் இவற்றை அரிந்து எடுத்துக் கொண்டு வாணலியில் டால்டா 5 ஸ்பூன் விட்டு அரிந்தவற்றைப் போட்டு வதக்கி வெந்ததும் கரம் மசாலா 2 ஸ்பூன் போட்டு உரித்த கத்தரிக்காயை அதில் போட்டு, தேவையான அளவு உப்பு போட்டு, எல்லாமாகக் கலக்கும் வரை கிளறி இறக்க வேண்டும்.

பி. கு: தக்காளி விலை அதிகமாக இருக்கும் காலத்தில் ஆம்சூர் எனப்படும் மாங்காய்ப் பொடியை வாங்கி வைத்துக் கொண்டு தக்காளிக்குப் பதிலாக உபயோகப்படுத்தலாம்.

### ஆலு டொமேடோ:

அரை கிலோ உருளைக்கிழங்கை அலம்பி வேக வைத்து உரித்துக் கொள்ளவும். பிறகு வாணலியில் 5 ஸ்பூன் டால்டா விட்டு சீரகம் ஒரு ஸ்பூன் போட்டு வறுத்துக் கொண்டு கால் கிலோ தக்காளி, கால் கிலோ வெங்காயம், 5, 6 பச்சை மிளகாய்களை அரிந்து போட்டு வெந்ததும் 2 ஸ்பூன் கரம் மசாலா, உப்பு, மஞ்சள் பொடி போட்டுச் சிறிது தண்ணீர் விட்டு வைக்க வேண்டும். பிறகு அதில் உரித்த கிழங்கைத் துண்டங்களாகப் போட்டு, கொத்துமல்லியும் போட்டுக் கொதித்துக் கெட்டியாக வந்ததும் இறக்க வேண்டும்.

### ஆலு மேத்தி:

அரை கிலோ உருளைக்கிழங்கை வேக வைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். வெந்தயக் கீரையை நன்கு அலம்பிச் சமைத்துக் கொள்ள வேண்டும். பிறகு வாணலியில் டால்டா 4 ஸ்பூன் விட்டு சீரகம் போட்டு வெங்காயம் கால் கிலோ, தக்காளி கால் கிலோ அரிந்ததை அதில் போட்டு வதக்கி, அதனுடன் கரம் மசாலா, உப்பு சேர்த்து வெந்த கீரையையும் துண்டு போட்ட வேக வைத்த கிழங்கையும் உப்புப் போட்டு அதில் கொட்டிக் கிளறி இறக்க வேண்டும். இது தக்காளி, வெங்காயம் சேர்க்காமலும் செய்யலாம்.

### பாலக்:

பாலக்னப்படும்கீரை இப்போது இங்கும் கிடைக்கிறது. அதை இரண்டு கட்டு வாங்கி வந்து நம் கீரையைப் போல் சமைத்து, கால் கிலோ தக்காளி, கால் கிலோ வெங்காயம், 4, 5 பச்சை மிளகாய்கள் (நறுக்கியது) வதக்கி, 2 ஸ்பூன் கரம் மசாலா, உப்பு போட்டுச் சமைத்த கீரையை அதனுடன் கொட்டிக் கிளறி இறக்க வேண்டும். இதே போல் முளைக்கீரை, பசலைக் கீரையிலும் செய்யலாம்.



'பரங்கிக்காய் வாங்கினால் (மஞ்சள் பூசணி) அதை சமைத்துவிட்டு நடுவில் உள்ள குடல் போன்ற பாகத்தை வீணாக்காமல் அதை எண்ணெய் விட்டு வதக்கி அத்துடன் வறுத்த பருப்பு, மிளகாய், புளி, உப்பு சேர்த்துத் துவையல் அரைத்து சாப்பிடலாம். மிகவும் ருசியாகவும், மணமாகவும் இருக்கும்.

— ராஜலட்சுமி.

### கரேலே:

5, 6 பாகற்காய்களை அலம்பி முன் தோலைச் சீவி எடுத்து இரண்டாகப் பிளந்து உள்ளிருக்கும் கொட்டைகளை எடுத்துவிட்டு உப்புப் பிசிறி ஊற வைக்க வேண்டும். உப்பினால் நீர்த்து விடும். பின் அதை எடுத்து, பிளந்த பகுதியில் உப்பு, கரம் மசாலா, தக்காளி, வெங்காயம் கலவையை வதக்கி அதனுள் வைத்து ஒரு நூல் போட்டுக் கட்டி, காயை ஸிம்மரில் வைத்து வாணலியில் 4 ஸ்பூன்

# அவளைப் போலவே விரைந்து வளரும் அன்புப் பரிசினை அளித்திடுவீர்

## இதோ, 'பணத்திலும் மேம்பட்ட பத்திரங்கள்'!

கத்தோலிக் சிரியன் பேங்க் உங்களுக்கென புத்தம் புதிய அன்பளிப்புத் திட்டம் ஒன்றை உருவாக்கியுள்ளது. அதுவே 'பணத்திலும் மேம்பட்ட பத்திரங்கள்'. (Better-than-Cash Certificates) இதற்கு ஏன் இப்படி ஒரு பெயர்? ஏனெனில் இதில் முதலீடு செய்யப்படும் உங்கள் பணம் உங்களது அன்புக்குரிய மனைவி, மகன், பேரக்குழந்தைகள் போன்றவர்களுக்காக அதிகமாக உழைத்து அமோக லாபம் அளிக்கிறது.

இத்திட்டம் எப்படிச் செயல்படுகிறது? உங்களது பேத்திக்கு அன்பளிப்பாக நீங்கள் ஒரு தொகை கொடுக்க விரும்பினால், அதற்குப் பதிலாக, 'பணத்திலும் மேம்பட்ட பத்திரங்களை' வாங்கிக் கொடுங்கள். மொத்தமாகவோ அல்லது தவணைகளிலோ பணம் செலுத்தி இவற்றை நீங்கள் வாங்கலாம். 10 ஆண்டுகள் கழிந்த பின்னர், நீங்கள் செலுத்திய தொகையை விட ஏறக்குறைய மூன்று மடங்கு தொகை கிடைக்கும். உங்களது அன்புப் பரிசு பற்றி உங்கள் பேத்திக்கு ஆண்டு தோறும் நினைவூட்ட, அவள் பெயரை கம்ப்யூட்டரில் பதிவு செய்து அவளது பிறந்த நாளன்று வாழ்த்து அட்டையும் அனுப்பி வைப்போம்.

உதாரணமாக மொத்தம் ரூ. 1489.80 அல்லது ரூ. 120 வீதம் 12 மாதங்கள் செலுத்தி, ரூ. 4000 மதிப்பு கொண்ட 'பணத்திலும் மேம்பட்ட பத்திரத்தை' நீங்கள் பெறலாம். 10 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தப் பத்திரத்துக்குப் பணம் பெறலாம். பத்திரத்தை முதிர்வுக்கு முன்னதாகவே திருப்பித் தந்து பணம் பெறவும் முடியும். அல்லது இன்னும் குறுகிய காலத்தில் முதிர்வடையும் பத்திரங்களையும் பெறலாம்.

கத்தோலிக் சிரியன் பேங்க் வழங்கும் 'பணத்திலும் மேம்பட்ட பத்திரங்கள்' உங்களது அருமைப் பேத்தியின் அழகுத் தோற்றத்தைக் கண்டு, 'அட! எப்படி வளர்ந்து விட்டாள்!' என்று நீங்கள் வியப்பதைப் போலவே, உங்களது அன்புப் பரிசும் விரைந்து வளர்ந்திட வழி வகுக்கும் அற்புதத் திட்டம்.






**கத்தோலிக் சிரியன் பேங்க்**

**தி கத்தோலிக் சிரியன் பேங்க் லிமிடெட்.**

**தலைமை அலுவலகம்:**

செயிண்ட் மேரீஸ் காலேஜ் ரோடு,

திருச்சூர்-680 020.

OBM 433 TM

டால்டா விட்டுச் சீரகத்தை வதக்கி எடுத்துக் கொண்டு அதில் பாகற்காய்களைப் போட்டு மூடிவிட வேண்டும். அவ்வப்போது திருப்பி விட்டுக் கொண்டு இருக்க வேண்டும். பொன் நிறமாக வந்ததும் இறக்கி விட வேண்டும். இதேபோல்வெண்டையைப்பிளந்தும்செய்ய லாம்.

### சோளே/மட்டர்:

காய்ந்த பட்டாணி (அ) கொண்டைக் கடலை (அ) காராமணி பெரியது இவற்றுள் ஏதாவது ஒன்றை முதல் நாள் இரவே ஊற வைத்துக் கொள்ள வேண்டும். மறுநாள் வாணலியில் டால்டா 5 ஸ்பூன் விட்டு, சீரகத்தை வறுத்துக் கொள்ளவும். கொப்பரை சீவியில் சீவிய வெங்காயத்தை (கால் கிலோ) இதனுடன் போட்டுப் பொன் நிறமாக வரும் வரை வதக்கி, கால் கிலோ தக்காளி போட்டு வதக்கி, கரம் மசாலா, உப்பு சேர்த்து வதக்கிக் கொள்ளவும். இதற்குள் ஊற வைத்ததைக் குக்கரில் வேக விட்டு எடுத்துக் கொண்டு உப்பை அளவாகப் போட்டு, வதக்கிய கலவையில் இதைக் கொட்டி நன்றாகக் கலந்ததும் இறக்கி விட வேண்டும்.

தண்ணீரும்சக்கையுமாக இல்லாமலிருக்க கடலை (அ) பட்டாணியைக் கொஞ்சம் தனியாக எடுத்து நசுக்கி அதில் கொட்ட வேண்டும். அல்லது வேக வைத்த உ. கிழங்கு ஒரு துண்டு எடுத்து அதை மசித்துப் போட்டால் கொஞ்சம் கெட்டியாகி விடும். இதேபோல் மற்ற இரண்டிலும் செய்யலாம்.

### மட்டர் ஆலு:

உருளைக்கிழங்கை வேக வைத்து உரித்துத் துண்டுகள் போட்டு எடுத்துக் கொள்ளவும். பிறகுபச்சைப்பட்டாணியை(டெல்லி)வாணலியில் சீரகம் போட்டு டால்டாவில் வறுத்துக் கொண்டு அதனுடன் வதக்கி, கால் கிலோ தக்காளியையும் அதனுடன் வதக்கி, உப்பு, 2 ஸ்பூன் கரம் மசாலா சேர்த்து வதக்கி அதனுடன் உருளைக்கிழங்கு சேர்த்து கொதிக்க வைத்து இறக்க வேண்டும்.

### ஆலு கோபி:

காலிஃப்ளவரை நன்கு அலம்பிப் பெரிது பெரிதாக அரிந்து கொண்டு உருளைக் கிழங்கை வேக வைத்துக் கொண்டு பின் வாணலியில் டால்டா விட்டுச் சீரகம் போட்டு வறுத்துப் பின் வெங்காயம் கால் கிலோ, (பாதியில் நீளநீளமாக அரிந்தது), கால் கிலோ தக்காளி, மிளகாய் 4 ஆகிய வற்றைப் போட்டு, கரம் மசாலா, உப்பு, மஞ்சள் பொடி சேர்த்து காலிஃப்ளவரையும் போட்டு வதக்கி எடுத்துக் கொண்டு வெந்த உருளைக்கிழங்கை அதில் போட்டுச் சிறிது நீர் விட்டு வதக்கி இறக்க வேண்டும். இதைப் பொரியல் மாதிரி கெட்டியாகவோ அல்லது கூட்டு மாதிரி தளரவோ செய்யலாம்.

### தால்:

து. பருப்பு 100 கிராம், (அ) ப.பருப்பு 100 கிராம் வேக வைத்துக் கொண்டு தக்காளி, வெங்காயம், பச்சை மிளகாயை வாணலியில் டால்டா, சீரகம் போட்டு வறுத்துக் கொண்டு மஞ்சள் பொடி, கரம் மசாலா, உப்பு போட்டு வேக வைத்த பருப்பில் கொட்டி இறக்க வேண்டும். இதே போல் து. பருப்பு, ப. பருப்பு சேர்த்து அல்லது உ. பருப்பில் தனியாகவோ செய்ய லாம்.

— ஜெயலட்சுமி பார்த்தசாரதி.



1987ம் வருடம் நான் பதவி ஏற்பதற்கு முன் என் பள்ளி நிர்வாகி என்னிடம் ஒரு வேண்டுகோள் முறையில் ஒரு உத்திரவு இட்டார். "பள்ளியை அதிகமாக மாணவர்கள் வந்து படித்துப் போகக் கூடிய பள்ளியாக, எல்லா இன மக்களும் வரக் கூடிய பள்ளியாக, பள்ளி நிர்வாகம் முதல் பிள்ளைகளின் படிப்பு வரை எல்லாவற்றிலும் தரம் அதிகம் உயர்த்திக் காட்டி நீ சாதனையைப் படைக்க வேண்டும்" என்றார்.

அதனை நான் ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டேன். 1987 கோடை விடுமுறையில் சுற்று வட்டாரங்கள் எல்லாம் குடிக் கணக்கும் செய்து பிள்ளைகள் 1987ம் வருடம் கல்வியாண்டில் மும்மடங்கியதாக்கியதோடு மட்டுமில்லாது மாணவர்களின் தரத்தையும் அதிகளவும் உயர்த்தியும் எல்லோருடைய பாராட்டுக்களைப் பெற்றேன். குறிப்பாக 90 வயதைத் தொடும் என் நிர்வாகியின் ஆசியையும் பாராட்டுக்களையும் பெற்றேன். என் ஓராண்டுக்கால ஆசிரியப் பணியில் நான் செய்த சாதனை என் வாழ்வில் தொடர வேண்டும் என்பதுதான் எனது பிரார்த்தனை.

— வி. புஷ்பா.

# ஆரோக்கிய அரசன் ஆப்பிள்!

"பன்னிரண்டு ரூபாய் கிலோவாம். இந்த மாதிரி விலையில் ஆப்பிள் வாங்க வேண்டு மானால் கொள்ளை அடித்தால்தான் முடியும்" என்று அங்கலாய்த்தார் நண்பர். நான் கேட்டேன், "ஏன் ஸ்வாமி, உங்கள் வீட்டுக்குப் பின்னால் பரங்கிமலையிலிருந்தும், பல்லாவரத்திலிருந்தும், பயிரிடப்பட்டுக் கொண்டுவரப் பட்ட பாதி அழுகல் தக்காளிப் பழத்தை ரஸத்துக்கென்று சென்ற வாரம் பதினாறு ரூபாய் கிலோ கொடுத்து வாங்கினீரே. அதைவிடவா இமயத்தின் மடியிலிருந்து இரண்டாயிரம் மைல்கள் கடந்து வந்து பன்னிரண்டு ரூபாயில் கிடைக்கும் ஆப்பிளின் விலை அதிகமாகிவிட்டது?"

ஆப்பிளுக்கு நிகர் ஆப்பிள்தான். மனிதனுக்கு இயற்கையின் வெகுமதி அது. முக்கனிகளுடன் (மா, பலா, வாழை) நான்காவது கனி ஒன்று சேர வேண்டுமானால், ஆப்பிளுக்குத்தான் அத்தகுதி உண்டு. "உண்டால் தினம் ஒரு ஆப்பிள், வாரான் வைத்தியன் வாசலிலே" (**An apple a day keeps the doctor away**) என்ற பழமொழி மிகையானது அல்ல. குறிப்பாக இதன் மூலம் தூக்கத்தில் நடப்பது, போஷாக்கு இன்மை, கை கால் இழுப்பு வலி போன்ற நோய்கள் கூட குணம் ஆகின்றன. டைனிங் டேபிளுக்கு இது ஒரு அழகையும், கம்பீரத்தையும், கௌரவத்தையும் அளிக்கிறது. எங்கிருந்தோ வந்து இன்று இமயத்தைத் தாயகமாகக் கொண்டுவிட்டது இது.

இதில் விசேஷம் என்னவென்றால், பிறந்த மண்ணை விட இதற்குப் புகுந்த மண்ணில் நிறமும், ருசியும், மணமும் அலாதி. காரணம், இமயமடியின் மண்வாங்கும், பக்குவமான வெட்பதட்ப நிலையும், சூரியனின் இதமான சூடும், ஒன்று சேர்ந்து உலகில் வேறு எங்குமில்லை. காஷ்மீரிலும், குலுவிலும் உ.பி.யிலும், இமாசல் பிரதேசத்திலும் கோடிக்கணக்கில் பழுத்துக் குலுங்கும் இக் கனியை, நம் நாட்டுக்குக் கொண்டு வந்து அதை பிரபலப்படுத்துவதற்கென்றே தம் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்ட மேனாட்டார் பலர் உண்டு என்பதை நம்மில் எத்தனை பேர் அறிவர்?

1857ம் ஆண்டு சிப்பாய்க் கலகத்துக்கப் புறம், வெள்ளையனின் இந்தியர்களை அடக்கு முறையைக் கண்டு மனம் வெதும்பி, பானன் என்ற ஆங்கிலேயர், கிழக்கிந்திய கம்பெனியின் வேலையை விட்டுவிட்டு பத்ரிநாத்துக்குச் சென்றார். அங்கு ஒரு தலைமை குருவிடம் ஜோதிடம் பயின்றார். கற்றுக் கொண்ட ஜோதிடத்தை விட கற்றுக் கொள்ளாமல் தானாகவே வந்தடைந்தது மற்றொரு கலை: காதல். குருவின் மகளையே காதலித்து மணந்து கொண்டார். இருவரும் கால்நடையாகவே, குடியேறும் நோக்கத்துடன், குலு பள்ளத்தாக்குக்கு சென்றடைந்தனர். அப்பள்ளத்தாக்கையே செழுமையுறச் செய்து, அதன் மூலம் அங்கு நிலவும் கடுமையான ஏழ்மையைப் போக்கும் பொருட்டும், தங்கள்







வாழ்வை அர்ப்பணிக்க உறுதி பூண்டனர்.

பானன் ஆப்பிள் விதைகளையும், நாற்றுகளையும், பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்தார். செடிகள் பிழைத்துக் கொண்டன. அங்குள்ள மக்களும்தான். இன்று இங்கு ஆப்பிள் பயிரிடுதல் பிரம்மாண்டமான தொழில்.

இவர்களுக்கெல்லாம் முன்னோடி, அமெரிக்கப் பாட்டிமார்கள். தங்கள் பேரக் குழந்தைகளுக்குக் கூறும் பெருமை வாய்ந்த 'ஜானிசாப்மான்' என்பவரின் சரிதம். அவருடைய இயற்பெயரை எல்லாரும் மறந்து போய் அவரை 'மிஸ்டர் ஆப்பிள் விதை' என்றே அழைத்தனர். அமெரிக்காவின் 'போஸ்டன்' நகரில் 1775–ம் ஆண்டு பிறந்த அவர், பசிதீர்க்கும், பிணிதீர்க்கும் ஆப்பிளை அமெரிக்காவெங்கும் பரப்புவதையே குறிக்கோளாக கொண்டு வாழ்ந்தவர். கிழிந்த சட்டை, வெறும் கால். அதிகமாகக் கால்நடைதான். தோளில் மட்டும் தூக்க முடியாத பை ஒன்று தொங்கும். அதில் வழிய வழிய ஆப்பிள் விதைகள். வெகு தூரங்களுக்கு, வண்டியிலும், நடந்தும், நதிகளைக் கடந்தும் செல்வார். செல்லும் இடங்களிலெல்லாம் ஆப்பிள் விதையை நட்டுக் கொண்டே செல்வார். அமெரிக்காவின் ரம்மியமான மேற்கு எல்லை, அவர் கைபட்டவுடன் தங்கப் பழங்களுடன் குலுங்கலாயிற்று. தன் கடமையை முடித்துக் கொண்டு அவர் வீடு திரும்பிய போது, இரண்டரை லட்சம் சதுர கிலோ மீட்டர் பரப்பளவில் ஆப்பிள் தோட்டங்கள் அவர் பெருமையைப் பறை சாற்றின.

ஆப்பிள் தோட்டத்தில் முதலீடு செய்பவர் அதை முப்பது ஆண்டுகளுக்காகச் செய்கிறார். ஏனென்றால் இதற்கு நல்ல அனுபவமும், எந்த மண்ணில் எந்த ரகம் சிறந்தது என்ற ஆழ்ந்த அறிவும், உழைப்பும், வருட முழுதும் பராமரிப்பும், ஆராய்ச்சியும் தேவை. நல்ல மகசூலை அளிக்கும் இது மிக லாபகரமான தொழில். அறுவடை ஐந்து, ஆறு வார காலம் நீடிக்கும். பழம் பக்குவ நிலைக்கு வந்துள்ளதா இல்லையா என்பதை அறிய அனுபவம்தான் முக்கியம். முக்கியமாக கவனிக்கப்படுபவை பழத்தின் நிறம், பின்னணியில் உள்ள வண்ணம், அழுத்தக் கட்டு போன்றவை. ஒவ்வொரு பழமும் கையால் பறிக்கப்பட வேண்டும் — பழம், மரம் இரண்டுக்குமே பாதகம் ஏற்படாத வகையில்.

ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர்கள் கடந்து இவைகளை அனுப்புவதுதான் மிகவும் கடினமாக பிரச்சினை. ஸ்ரீநகரில் கிலோ இரண்டு ரூபாய் விற்கும் ஆப்பிள் ஸ்ரீவில்லிபுத்தூரில் பன்னிரண்டு ரூபாய் ஆகிறது.



இடையில் 8–10 நாட்கள் ஓடி விடுகின்றன. ஆனால் வாங்குபவர் பழம் புத்தம் புதிதாகவும், இனிமை குன்றாமலும், அடிபடாமலும், எந்தவிதத்திலும் பாதிக்கப்படாமலும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறார். ஆதலால் பத்திரமாக, விரைவாகச் செல்ல, மலைப் பிராந்திய சாலைகளின் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ள, 'பாக்'கிங் செய்வது மிக்க அவசியம். இமயத்தின் பனிப்படலங்களைக் கிழித்துக் கொண்டு சமவெளிக்கு இறங்கிய பின், தென்னாட்டின் சூடுபட்டதும் மூடப்பட்டு உள்ள பழங்கள் குபீரென்று கெட்டு விட வாய்ப்புகள் அதிகம். ஆகையால் காற்று உள்ளே போய்வரவும் வசதி செய்ய

அறிமுகப்படுத்துகிறோம்



**பட்டர்:ஃப்ளை**®

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காஸ் ஸ்டவ்

- ★ சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆனது
- ★ பித்தளை பர்னர்கள்
- ★ மிகுந்த எரிபொருள் மிச்சம்
- ★ ஒற்றை அடுப்பு காஸ் ஸ்டவ்வும் உள்ளது



தயாரிப்பாளர்கள் :

காந்திமதி அப்ளையன்ஸஸ் பி. லிட்

272, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை,
சென்னை-600 018.
போன் : 454186,
458722, 453056.

**பட்டர்:ஃப்ளை**®

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காஸ் ஸ்டவ்

10 வருட உத்திரவாதம்

Concept/M/1093

வேண்டும்.

இதையெல்லாம் கவனித்தால் மரப்பெட்டிகளுக்கு மிஞ்சின 'பாக்'கிங் பொருள் இல்லை. இதனால் ஒவ்வொரு சீசனிலும் தேவைப்படும் லட்சக்கணக்கான மரப் பெட்டிகளுக்காக காடுகள் வெகுவேகமாக அழிக்கப்பட்டு வருகின்றன. சுற்றுப்புறம், சூழ்நிலை, மரம் வளர்ப்பு, காடுகள் பராமரிப்பு போன்ற விஷயங்களில் ஒரு விழிப்பு நிலை ஏற்பட்டிருக்கும் இந் நாளில் காடுகளை அழிப்பது நியாயமில்லை. ஆனால் அவைகளை அழிக்காமல் காரியம் நடக்காது. இது ஒரு விசித்திர நிலை. மரப்பெட்டிகளுக்கு மாற்றும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. இதுபற்றிய ஆராய்ச்சிகள் பலனளிக்கும், காடுகள் பிழைத்துப் போகும் என்று நம்பிக்கையுடன் காத்திருப்போம்.

ஆப்பிள் ஒரு சுலபமாக ஜெரிக்கக் கூடிய, முழுமையான, இயற்கையின் விட்டமின்கள் கொண்ட உணவு. ஆரோக்கியம் பற்றிய பொது உணர்வு, பரவலாகப் பெருகிவரும் இக் காலத்தில் அதன் டிமாண்ட் கூடிக் கொண்டே செல்வதில் வியப்பில்லை. மேலும் அது குளிர் காலத்தில் மற்ற முக்கியமான கனிகள் (ஆரஞ்சு, சாத்துக்குடி தவிர) கிடைக்காத காலத்தில் மிகுதியாகக் கிடைக்கிறது. பல ஆயிரம் ஆண்டுகளாக நம்மிடையில் புழங்கிவரும் 'நாட்டு'ப் பழங்கள் பல இருக்க, 150 ஆண்டுகளாக மட்டும் நம்முடன் வாழும் ஆப்பிள், தன் குணத்தினால், தரத்தினால், அழகினால், ருசியினால், 'ஆரோக்கியத்தின் அரசன்' என்று முடி சூட்டிக் கொண்டதில் ஆச்சரியமே ஏதுமில்லை!

— எஸ். டி ராகவன்

---

# ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுக்கு!

**மு**தல் வகுப்பில் சேரும் குழந்தைகள் தன் தாயைப் பிரிந்து, வெளியுலகத்தில் விடப்படுகின்றன. அப்படி விடப்படும் குழந்தைகள், தன் தாயின் பரிவை, பாசத்தைப் பள்ளியிலும் எதிர்பார்க்கின்றன. அவை அழுதால் சமாதானப்படுத்தி, பரிவோடு, பாசத்தோடு, ஒரு தாயின் ஸ்தானத்தில் நின்று, கடமைகளை ஒழுங்காகச் செய்வது பெண் ஆசிரியைகளே!

முதல் வகுப்பிலிருந்து மூன்றும் வகுப்பு வரை பெண் ஆசிரியைகளே கவனித்துக் கொள்ள வேண்டும் என்ற சட்டம் இயற்றினாலும் நல்லதுதான்.

ஏனெனில் பெண்கள் பிரச்னைகளைச் சமாளிப்பதில் வல்லவர்கள். உதாரணமாக முதல் வகுப்பில் சேரும் ஒரு குழந்தை, திடீரென்று தன் தாயை நினைத்து அழக்கூடும். அப்போது ஓர் ஆண் ஆசிரியராக இருந்தால், அக்குழந்தையிடம் இரண்டு, மூன்று முறை 'அழாதே' என்று கூறுவார். குழந்தை அவர் கூறுவதைக் கேட்காமல் மேலும் அழுதால், அவருக்கு எரிச்சல்தான் வரும். அக்குழந்தையை அடிப்பார். எனவே குழந்தை அழும். பயப்படும். பள்ளிக்கு வர விரும்பாது. இதனால் கல்வியின் மீது வெறுப்பு ஏற்படும்.

எனவே மேல்நிலை, கல்லூரிக் கல்வி உயர்ந்து வளர, ஆரம்பக் கல்வி, அடிப்படைக் கல்வி வளர வேண்டும். அதற்குப் பெண்களின் பங்கு அதிகம் வேண்டும்.

வளர்ந்து வரும் சமுதாயத்தைப் பொறுப்புள்ள, அறிவுள்ள, ஆக்கபூர்வமான சமுதாயமாக மாற்றப் பெண் ஆசிரியைகள் பாடுபட வேண்டும்.

பெண்ணின் முக்கியத்துவம் அறிந்து செயல்பட்டால், கல்வித் துறையில் மிகச் சிறந்த பயனை அடையலாம்.

ஆரம்பப் பள்ளியில் போதிக்கும் ஆசிரியர்களுக்குப் பொறுமை, அன்பு, சமயோசிதம், சாதுர்யம், பேச்சில் இனிமை இவை யனைத்தும் தேவை. இவை பெண்களிடம் மிகுந்து இருக்கிறது எனக் கூற விரும்புகிறேன்.



— விஜயலட்சுமி சிவசங்கரன்.

இயற்கையிலேயே கண்ணைப் பாதுகாக்க இமை இருந்தாலும் அந்தப் பாதுகாப்பு மட்டும் போதுமா? நாம் இன்றைய காலத்தில் ஐடெக்ஸ், ஐலைனர், ஐஷேடோ எனக் கண்ணை அலங்கரிக்கிறோமே ஒழிய கண்ணினைக் கண்போல் பாதுகாக்கத் தெரியவில்லை.



# கண்களுக்கு

"என் பாட்டிக்கு வயது எண்பது. 'ஊசி நூலைக் கொடுத்தால் கோர்த்துத் தருவாள். அவ்வளவு பார்வைக் கூர்மை. ஆனால் என் பையன் 8வது படிக்கிறான். இப்பவே கண்ணாடி போட்டிருக்கிறான்.' என பழம் பெருமை பேசுவதில் நேரத்தை கழிப்போமே ஒழிய நம்மில் எத்தனை பேர் கண்ணைப் பாதுகாக்கிறோம்?

அந்தக் காலத்தில் வாரந் தவறாமல் எண்ணெய்க் குளியல் உடம்பின் குளிர்ச்சி மற்றும் மூளைக்குகந்த முறையில் நடைபெறும். இன்றைய நமக்கு (பெரும்பாலான டாக்டர்கள் எண்ணெய்க் குளியல் வேண்டாம் என்பர்) நேரமும் காலமும் இறக்கை கட்டிப் பறக்கையிலே 'ஷாம்பூ' பாத்தைக் கொடுக்கிறது.

அதிகாலை வெயிலும் மாலை வெயிலும் மட்டும் உடம்புக்கு உகந்ததாய் இருக்கையில் நம்முடைய பிழைப்புக்காக சுட்டெரிக்கும் மதிய வெயிலைப் பாராமல் அலைய வேண்டிய சூழ்நிலை. இன்றைய நிலையில் இவைகளெல்லாம் தவிர்க்க முடியாதது ஆயினும் வரும் முன் காக்கலாம்.

தொலைக்காட்சி மற்றும் சினிமா அடிக்கடி பார்த்தல், இவற்றால் கண் நரம்புகள் பாதிக்கப்படுகிறது. இதைத் தவிர்க்கலாம். வைட்டமின் ஏ சத்துள்ள காய்கறிகள், கீரைகள், பழவகைகள் உண்பதன் மூலமும், கண் பயிற்சி மூலமும் குறைகளை நிவர்த்திக்கலாம்.

**காய்கள் :**

காரட், முள்ளங்கி.

**கீரை வகைகள் :**

வெந்தயக் கீரை, மூக்கிரட்டை, முளைக் கீரை, முருங்கைக் கீரை, முட்டை கோஸ், அகத்திக் கீரை, அரைக் கீரை, இலெட்சுக் கீரை, பொன்னாங்கண்ணி, பசலை, புதினா, சிறுக் கீரை, கல்லாத்துக் கீரை, கொத்து மல்லி, கறிவேப்பிலை, கரிசலாங்கண்ணி.

**பழங்கள் :**

அத்திப்பழம், அன்னாசி, ஆரஞ்சு, சீத்தா, தக்காளி, நாவல், பப்பாளி, வாழை, மாம்பழம் (இனிப்புவகை) பலாப்பழம், பப்ளிமாஸ், பேரீச்சை.

**இலெட்டூஸ் கீரை :**

கண் கோளாறுகளை நிவர்த்திக்கும்.

**கரிசாலை :**

தைலம் செய்து தலை முழுகினால் கண் பார்வையும் புத்தி தெளிவும் ஏற்படும். கண் மை தயாரிக்கலாம்.

**கொத்துமல்லி :**

மூளை பற்றிய சூட்டை அகற்றும்.

**சிறுகீரை :**

நேத்திர நோய், கண்காசம் நீக்கும். ஒரு மண்டலம் உண்டு வர புத்திக் கூர்மை ஞாபகசக்தி ஏற்படும்.

**பொன்னாங்கண்ணி :**

கண் நோய் தீரும். கண் காசத்திற்கு உப்பில்லாமல் வேக வைத்து வெண்ணெயில் சேர்த்து சாப்பிட குணம் உண்டு.



# இமை போதுமா?

வெண்ணெயில் வதக்கி கண்மேல் வைத்து கட்ட கண்நோய் தீரும். இதன் தைலம் எல்லாவித கண்நோய்க்கும் பயன்படும்.

**முளைக்கீரை, மூக்கிரட்டை:**

பார்வைக் குறைவைத் தடுக்கும்.

மூளை பலவீனம் அடைவதால் கண் பார்வை மங்கும். அல்லது கண்ணில் நீர் தேங்கியபடி இருக்கும். ஏழு அல்லது எட்டு தோல் உரித்த பாதாம் பருப்பை, சிறிது சோம்புடன் சர்க்கரையும் சேர்த்து நன்கு அரைத்து பாலில் கலந்து இரவில் சில தினங்கள் பருகி வர பார்வை கூர்மையாகும். கண்ணில் நீர் தேங்கியவர் பாதாம் பருப்பை ஒரு மாத காலம் தொடர்ச்சியாய் உண்ண இந்நோய் நீங்கும்.

**குழந்தையின் பார்வை இழப்பிற்குக் காரணங்கள் :**

1. கர்ப்பிணியின் கவனக் குறைவு.
2. தாயிடமுள்ள பால்வினை நோய்.
3. வைட்டமின் 'ஏ' பற்றுக் குறை.

**பார்வை இழப்பைத் தடுக்கும் வழி :**

1. கர்ப்பிணித் தாயின் பராமரிப்பு.
2. தொடர்ந்து தாய்ப்பால் கொடுத்தல்.
3. பேதி நோய்க்கு சிகிச்சை.
4. குழந்தைக்கு ஏ வைட்டமின் நிறைந்த உணவு.
5. பச்சை காய்கறி, கீரை, பழ வகை.

பார்வைக் கோளாறு பிறந்த குழந்தையிடம் பொதுவாய் காணப்படுவதில்லை. பார்வை இல்லாமல் சில சமயங்களில் பிறக்கின்றன. எனவே ஒரு கர்ப்பிணித்தாய் தனக்கும், வயிற்றில் வளரும் சிசுவுக்குமாய் கூடுதலாக பச்சைக் காய்கறி உணவு அதிலும் ஏ வைட்டமின் உள்ள காரட், முருங்கைக் கீரை, பப்பாளி சாப்பிடுதல் நலம்.

கர்ப்பிணித்தாய் பால்வினை நோய் இருக்கிறதா என சோதனை செய்ய வேண்டும். பேறு காலத்தில் தாய்க்கு இந்நோய் இருப்பின் அவளது பிறப்புப் பாதையில் தங்கிய நோய் கிருமிகள் பிறக்கும் குழந்தையின் கண்களில் புகுந்து கண் சிவந்து கண்வலி நோய் ஏற்படும். உடனடி சிகிச்சை இல்லாவிடில் கண் பார்வை பாதிக்கப்படும்.

பேதி, சின்னம்மையால் பாதிக்கப்பட்ட குழந்தையின் உடலில் வைட்டமின் 'ஏ' சத்து குறைவதால்; கண்ணில் ஈரப்பசை குறைந்து, கண் பளபளப்பு மங்கி, சாம்பல் நிறப் புள்ளி வளருவதால் கண் காய்ந்து விடுகிறது. வளரும் குழந்தைக்கு மாலைக் கண் நோய் உண்டாகும்.

**குழந்தைக்கு பேதியாவதைத் தடுக்க:**

உப்பு, சர்க்கரை கலந்த நீர், இளநீர், தேநீர், எலுமிச்சை சாறு கலந்த நீர், பருப்பு வேக வைத்த தெளிந்த நீர், நீராகாரம் (உப்பு கலந்த)

பாதி கையளவு சர்க்கரை, ஒரு சிட்டிகை உப்பு ஒரு டம்ளர் நீரில் போட்டு கலக்கி, பேதியான ஒவ்வொரு முறையும் கொடுக்கவும். மறுமுறை பேதியாகும் முன் ஒரு டம்ளர் கொடுக்கவும். பேதி நிற்கும் வரை இனிப்பு நீரைக் கொடுக்கவும்.

| நோய்கள் | அறிகுறி | பாதுகாப்பு |
|---|---|---|
| கண் வலி | கண் சிவத்தல், அரிப்பு, நீர் வடிதல், எரிச்சல். | கவனக் குறைவு, பார்வைப் பாதிப்பை ஏற்படுத்தக்கூடும் தூசி, புகை, புழுதி, ஈக்கள் இவற்றிலிருந்து கண்ணுக்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டும். பளிச்சிடும் ஒளியைத் தவிர்த்தல், கண்ணைத் துடைக்கச் சுத்தமான துணி, ஆறு, குளத்தில் குளிப்பது தவிர்க்கப்படல். |
| கடுமையான கண் வலி | இமை வீங்குதல், கண்ணில் பீழை தள்ளுதல், கண் இமை ஒட்டிக்கொள்ளுதல், கண்ணைத் திறப்பதில் சிரமம், வெளிச்சத்தில் கண் கூசுதல், | தகுந்த சிகிச்சை பெறுவிடின் பார்வை இழப்பு. கண் புண்ணாகி விடும். |
| வெண் புள்ளி நோய் | கருவிழியில் வெண் நிறப்புள்ளி ஏற்படல், வலியும், கண் சிவப்பும் ஏற்படும். | தக்க மருத்துவ உதவி பெறுவிடில் பார்வை மங்கத் தொடங்கும். |
| கண் கட்டி | கிருமிகளால், பாதிக்கப்படுவதால் ஒருவித வீக்கம், கண் சிவத்தல், வலி. | சிறிதளவு உப்புடன் நீரில் துணியைக் கொதிக்கவைத்து அத்துணியால் ஒத்தடம் கொடுக்கலாம். நாம கட்டியை உரைத்து (கண்ணுக்கு வெளியே) போடலாம். சுடுசாதத்தில் வெண்ணெய் இட்டுச் சுத்தமான துணியில் சிறு மூட்டை கட்டி ஒத்தடம் கொடுக்கலாம். |
| கண் அரிப்பு | கண் வலியில் தொடங்கி பல மாதங்கள் நீடிக்கும். கண் சிவக்கும். நீர் வடியும். சிறு சாம்பல் நிறக் கட்டி இமையின் உள்பகுதியில் உண்டாகும். வெண் பகுதி பொங்கி, மேல் பகுதி சாம்பல் நிறமாய் மாறும். பின் இவை வெள்ளைத் தழும்புகளாக நாளடைவில் தடிப்புறும். தழும்புகளால் கீறல் ஏற்படுங்கால் பார்வை இழக்க நேரிடும். | இரவிலும் காலையிலும் சுத்தமான நீரில் கழுவவும். துடைக்கச் சுத்தமான துணியைப் பயன்படுத்தல், வைத்திய உதவி பெறல். |

ஆபத்தான விளையாட்டுக்கள், (கிட்டிப் புள்) மரக்கிளைகள், முட்செடிகள், பட்டாசு, மற்றும் கூர் நகங்கள் இவைகள் கண்ணுக்கு விபத்தை உண்டாக்குகின்றன.

மற்றைய கண் கோளாறுகள் மாறுகண், மங்கலான பார்வை கண்ணில் நீர் அழுத்தம் இவை நிவர்த்தி செய்யக் கூடியவையே. பெரியவர்களுக்கு வரும் காட்டராக்ட் என்ற விழிப்படல நோய் அறுவை சிகிச்சை மூலமாய் குணப்படுத்தலாம்.

**கண்ணுக்குச் சில பயிற்சிகள்:**




சௌகர்யமாக உட்கார்ந்து கொள்ளவும். இரண்டு கைகளை கூப்பியவாறு கட்டை விரல்களை மேல் நோக்கியவாறு வைத்து மற்ற விரல்களை சேர்த்துக் கொள்ளவும். கண்களுக்கு நேரே உயர்த்தி முழங்கையை மடித்துக் கொள்ளவும்.

**பயிற்சி நிலை — 1:**

1. கட்டை விரல் நகக் கண்ணின் மேல் பார்வையை நிலையாக வைத்துக் கொள்ளவும்.
2. வலப்பக்கம் கோடி வரைக்கும் இடப் பக்கம் கோடி வரைக்கும் ஊஞ்சலாடு வது போல் மெதுவாக உடலைத் திருப்பவும்.
3. கண்கள் போகும் திசையிலே தலையை யும் மெதுவாகத் திருப்பவும்.
4. கழுத்துக்கும் இடுப்புக்கும் இலேசான அசைவைத் தரும்.

**பயிற்சி நிலை — 2:**

1. கட்டை விரல் நகக் கண்ணில் மேல் பார்வையை நிலையாக வைக்கவும்.
2. தலைக்கு நேர் மேலும், கீழே மடி வரை யில் கைகளை கொண்டு வரவும்.
3. கழுத்தும் மேலும் கீழும் செல்ல வேண்டும்.

**பயிற்சி நிலை — 3:**

1. கட்டை விரல் நகக் கண்ணில் பார் வையை நிலையாக வைக்கவும்.
2. இடது முழங்காலில் இருந்து மூலை விட்டமாக இடதுபுறம் மேலேயும் வலது புறம் கீழாகவும் செய்யலாம்.

**பயிற்சி நிலை — 4:**

1. கட்டை விரல் நகக் கண்ணில் பார் வையைப் பதிக்கவும்.
2. வலது முழங்காலில் இருந்து மூலை விட்டமாய் வலதுபுறம் மேலேயும் இடதுபுறம் கீழாக செய்யவும்.

**பயிற்சி நிலை — 5:**

1. கட்டை விரல் நகக் கண்ணில் பார் வையை பதிக்கவும்.
2. மூடிய கையை கடிகார முள் சுற்றுவது போல் இடமிருந்து வலமாய் சுற்றவும்.

**பயிற்சி நிலை — 6:**

1. கட்டை விரல் நகக் கண்ணில் பார் வையைப் பதிக்கவும்.
2. மூடிய கையை கடிகார முள் எதிரி டையாய் சுற்றுவது போல் சுற்றவும்.

**பயிற்சி நிலை — 7:**

1. மூடிய கை பெருவிரல் நகக் கண் ணில் பார்வையை பதிக்கவும்.
2. நான்கு அங்குலத் தொலைவில் முகத் திற்கு அருகாமையில் வைக்கவும்.
3. பிறகு 18 அங்குல தொலைவிற்கு நீட்ட வும்.
4. பார்வை நகக் கண்ணில் இருந்த வாறே சுருக்கவும், கைகளை நீட்டவும் வேண்டும்.

இப்பயிற்சிகளினால் கண் பார்வைக் குறை கள் நீங்கும்.

— மங்களம்.

மழை, குளிர் காலங்களில் வடகம் நமுத்து சரியாகப் பொரியாது. அவ்வாறு நமுத்து விட்டால், பொரிப்பதற்கு முன்பு வெறும் வாணலியை சூடேற்றி அதில் வடகத்தைப் போட்டு சற்று பெரட்டி எடுத்துக் கொண்டு, பிறகு எண்ணெயில் பொரித்தால் நன்கு பொரியும், சீக்கிரமாகவும் பொரியும்.

— மீனு ரமணி.

# மை ஹிந்தி அத்யாபிகா ஹூ!

செமி ஃபைனலில் இந்தியா தோல்வி யடைந்தபின் எல்லாரும் விளக்கெண் ணெய் குடித்தது போல் ஆனார்கள். கல்கத்தா ஃபைனல் மேட்சில் அதிக ஆர்வம் இன்றித் தான் கேட்டார்கள்.

ஆனால் இவர் கேட்டார்: "என் ஃப்ரெண் டோட பையனுக்கு சென்ட்ரல் கவர்ன் மெண்ட் வேலை கிடைக்கும் போல இருக்கு. எக்ஸாம் பாஸ் பண்ணிட்டான். நார்த்ல போஸ்டிங் ஆகும். ஆறு மாசத்துக்குள்ள ஹிந்தி கத்துக்கணுமாம்... நீ கத்துக் குடுக்க றியா?'' என்றார். எனக்குக் கழுத்தில் தலை நிற்க யோசிக்கிற அளவு கர்வம்... கல்யாணம் ஆன புதிதில், என் ஹிந்தி அறிவு மறக்காமல் இருக்க நான் ஹிந்தி புத்தகங்கள்

எஸ். கனகவல்லி சாரங்கபாணி

"ரிலையன்ஸ் கோப்பை'' கிரிக்கெட் போட்டி என் ஹிந்தி அறிவை என் சுற்றுப் புறத்துக்கும், என் குடும்பத்துக்கும் வெளிப் படுத்தியது. கொடைக்கானல் டீ. வி. ஸ்டேஷ ஷன் வந்ததும், கும்பகோணத்திலேயே டீ. வி. டவர் இருந்தும் எங்கள் கூடவாசல், சுற்றுப்புற பல கிராமங்களில் டீ. வி. அதிகம் கிடையாது. விவசாய வருமானத்தை நம்பு கின்றவறுமைக்கோட்டிற்குக்கீழேவாழ்கின்ற கிராம மக்கள் டீ. வி. என்றால் என்ன என்று கேட்பவர்கள். எனவே கிரிக்கெட் போட்டி யின் போது பெரும்பாலானவர்களுக்கு ரேடியோவே கதி. ஆங்கில வர்ணனை முடிந்து ஹிந்தி வர்ணனை வந்து விட்டால், "அட தலையெழுத்தே. 'காரே. பூரே' என்று புரி யாமல்... என்று தலையில் அடித்துக் கொள் வார்கள்.

கிரிக்கெட் பைத்தியமான என்னை உரித் துக் கொண்டு பிறந்திருக்கும் என் பெரிய பெண், 'பேடில்' செருகிய பேப்பரும் கையு மாய், ரன் ரேட், போலிங், விக்கெட் வீழ்ச் சிக்கு 'சார்ட்' போட்டு விடுவாள். அவளுக் கும் ஹிந்தி கமெண்டரி தலைவலிதான்.

ரேடியோவைச் சுற்றி அமர்ந்து இருக்கும் குடும்பத்தவருக்கு ஹிந்தி வர்ணனையை நான் புரிந்து கொள்கிறேன்'' என்பது எட்டும் போது, அந்த ஒன் டே ஆட்டத் தில் இந்தியா ஆடத் துவங்கி பத்து ஓவர் முடிந்திருந்தது. அற்புதமான சிக்ஸர் ஒன்றை சித்து தூக்க, வர்ணனையாளர் கூப்சூரத் ஸ்ட்ரோக் (அழகான ஸ்ட்ரோக்) என்று வர் ணிக்க, நான் கைதட்டலுடன் மகிழ, விவரம் கேட்டவர்களுக்கு அதன்பின் ஹிந்தி வர்ண னையைத் தமிழில் மொழி பெயர்க்கும் பெருமைக்குரிய பதவி கிடைத்தது. பெரிய பெண்ணுக்கு ஸ்கோர் சார்ட், தடங்கல் இல்லாமல் எழுத முடிந்த சந்தோஷம். சின்ன வளோ, 'நீ கமெண்டரி கேளும்மா, காப்பி போட்டுக் கொண்டு இங்கேயே எடுத்து வந்துடறேன்'' என்றாள். அவளுடைய சிநேகிதிகள், அக்கம்பக்கச் சிறுவர்கள், இவரின் சினேகிதர்கள் கமெண்டரி கேட்க இங்கேயே குழுமி விட்டார்கள். ஒவ்வொரு மாட்சின் போதும் ஹிந்தி மொழியாக்கத் திற்கு.

படித்தால் தூக்கி எறிந்து விடுவேன் என்று கோபப்பட்டதால், புத்தகங்களை மூட்டை கட்டி உயரே எறிந்திருந்தேன். 'விவிதபாரதி'



யில் மனே ரஞ்சன், மன் சாஹேர கித்... போன்ற ஹிந்தி பாடல்கள் கேட்டால் ரேடியோவையே உடைத்து விடுவதாய்ப் பயமுறுத்தியவர், இன்று என் ஹிந்தி அறிவுக்கு முக்கியத்துவம் கொடுத்தால் கர்வம் ஏற்படாதா என்ன?

பரணில் கிடந்த ஹிந்தி புத்தகங்களைத் தூசு தட்டினேன். அ, ஆ, இ, ஈ சார்ட், கிராமர் புக், டிக்ஷனரி இவற்றை எடுத்து வைத்தேன். ஒரு நல்ல நாளில் "சரஸ்வதி நமஸ்துப்யம்..." சொல்லி, சாஸ்த்ரோக்தமாக நண்பரின் மகனுக்கு ஹிந்தி கற்பிக்க ஆரம்பித்தேன்.

"ஏம்மா, எங்களுக்கெல்லாம் கூடக் கற்றுக் கொடேன். என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் கற்றுக் கொள்ள ஆசைப்படறா..." என்றாள் என் பெரிய பெண்.

அக்கம்பக்கத்தில், "எங்கள் வீட்டுக் குழந்தைகளுக்கும் கற்றுக் கொடுங்களேன்" என்று அப்ளிகேஷன் போட்டார்கள்.

"கற்றுக் கொடுப்பது பற்றி ஒண்ணுமில்லே. ஆனால் உங்களை ஹிந்தி எக்ஸாம் எழுதத் தயார் பண்ணணும். நான் கோச் செய்தாலும், சென்டரில்தான் எக்ஸாம் எழுத



ணும். கும்பகோணம் போய் பரீட்சை எழுத ணும் என்று நினைக்கிறேன். எதற்கும் நான் இன்று தக்ஷிண பாரத் ஹிந்தி ப்ரசார் சபா விற்கு எழுதிக் கேட்கிறேன். என்னுடைய கல்வித் தகுதி, நான் ப்ராதமிக் போன்ற பரீட்சைகள் எழுத மாணவர்களைத் தயார் செய்து அனுப்பலாமா — போன்றவற்றைக் கேட்டு..." என்றேன்.

"எல்லாரும் ஆரம்ப உயிரெழுத்து, மெய் யெழுத்து வரிசைகள் முதலில் கற்றுக்கொள் ளட்டும். அதன் பிறகு பாடம் ஆரம்பிக்க லாம்." என்று பக்கத்து வீட்டு மாமி கூறித் தன் பையன்கள் இருவரையும் நோட்டுடன் விட்டு விட்டுச் சென்றாள். அப்படி இப்படி, என் மகளின் சினேகிதிகள், பக்கத்து வீட்டுப்பையனின் நண்பர்கள் என்று இருபத் தைந்துக்கு மேற்பட்ட மாணவர்கள் ஹிந்தி கற்கக் குழுமி விட்டனர்.

**துவரம் பருப்பு அதிக விலை விற்கும் இக்காலத்தில், அதற்குப் பதிலாகக் குறைந்த விலையில் கிடைக்கும் தட்டைப் பயிர், பாசிப் பயிர் போன்றவைகளைப் பயன்படுத்துவது எப்படி?**

**தட்டைப் பயிர், பாசிப் பயிர் போன்ற வைகளை வெயிலில் காய வைத்து, பின் ஒரு சொரசொரப்பான சிமெண்ட் தரையின் மேல் பரப்பி, சிறிய அம்மியின் குழவியினால் தேய்த்தால், மேல் தோல் உரிந்து, பருப்பு உடைந்து வரும். இப்பருப்புகளைச் சுத்தம் செய்து வைத்துக் கொண்டு, துவரம் பருப்புக்குப் பதிலாகப் பயன்படுத்தலாம். சுவை குறை யாது.**

**மேலும் இப்பருப்புகளை ஊற வைத்து வடை, அடை போன்ற டிபன் வகைக ளும் செய்யலாம். செலவும் குறைவு. ருசியோ மிகுதி!**

**— சுமதி.**

மாலை ஐந்து மணி முதல் ஆறரை வரை ஹிந்தி வகுப்புகள் நடத்தத் தீர்மானித் தேன். ஒரு பெரிய சைஸ் நோட்டு வாங்கி, வகுப்புகளில் அட்டெண்டன்ஸ் எடுப்பது போல் பெயர்கள் எழுதிக் கொண்டேன். சின்னதாய் ஒரு பிளாக் போர்டு வாங்கித் தரும்படி இவரிடம் ஓர் அப்ளிகேஷன் போட் டேன். தன் சினேகிதர்களின் பெண், பிள்ளைகள் ஐந்தாறு பேர் வருவதால் இவர், எங்கள் வீட்டுக் கூடத்தின் முற்றத்தில் ட்யூப் லைட் போட்டுக் கொடுத்தார். ட்யூப் லைட் விலையை ட்யூஷன் பணத்தில் தனக்குத் தந்து விட வேண்டும் என்று கூறினார்.

என் மகளோ, ஹிந்தி ட்யூஷனில் நான் வெகு நாளாய் ஆசைப்படும் முத்து தொங்கும் மாட்டல் வாங்கிக் கொள்ளலாம் என்று ஆலோசனை சொன்னாள்.

என் மாணவர்கள் ஹிந்தி எழுத்துக்கள் யாவற்றையும் கற்றுக் கொள்ளுமுன், தக்ஷிண பாரத் ஹிந்தி சபாவில் இருந்து திருச்சி பிராந்த ஆபீஸைத் தொடர்பு கொள் ளும்படி கடிதம் வந்தது. நான், உடனே திருச்சி பிராந்திய சபைக்குக் கடிதம் எழுதி னேன்.

"ஹிந்தி டீச்சர்னு ஒரு லுக் இருக்க வேண் டாமா அம்மா? காலையில் வீட்டு யூஸுக்குக் கட்டிக்கற புடைவையோடு கிளாஸ் எடுக் கறே! சில சமயம் கொசுவம் தூக்கிச் செருகிண்டதை அவிழ்த்து நீவிக் கூட விடற தில்லே. முந்தாநேத்து இடுப்பில் 'ஹேங்கி' போல் உன்னுடைய கைப்பிடித் துணி — அதாவது அப்பாவின் கிழிசல் பனியன் கன்னங்கரேல்னு. இனிமேல் ஈவ்னிங் பளிச்னு பாலியஸ்டர், டெரின் ஸேரி மாத் திண்டு, ப்ளீட் பின் பண்ணிண்டு அழகாய்க் கொண்டை போட்டுண்டு ஸ்மார்ட்டாய் இருக்கணும். இனிமேல் எங்களுக்கு வேர்ட்ஸ், சின்ன சென்டன்ஸ் சொல்லித் தர ஆரம்பிச்சுடுவே... அதனால் முதல் நாளே நோட்ஸ் தயார் பண்ணி வெச்சுண்டு பாடம் நடத்த ஆரம்பிச்ச பிறகு வார்த்தைக்கு அர்த்தம் டிக்ஷனரியில் தேடக் கூடாது. நேற்று ரம்யாவிற்கு 'ப' வரிசை எழுத்தில் மூன்றாவது 'ப' எது என்று கன்ஃப்யூஸ் பண் ணிட்டாயே...!"

என்று பெரிய லெக்சர் அடித்த முதல் பெண், அன்றைக்கு அவளுக்கு இடுப்பை ஒடிக்கும் ஹோம் ஒர்க் ஸ்கூலில் தராததால் எனக்கு உதவி பண்ணுகிறேன் பேர்வழி என்று என்னைப் பிடுங்கி எடுத்தாள். அட் டென்டன்ஸ் எடுக்கும் நோட்டில் சில திருத் தங்கள். அடுத்ததாய் இருபத்தைந்து ஸ்டு டன்ட்ஸ்களுக்கும் மாதம் ட்யூஷன் ஃபீஸ் பத்து ரூபாய் வாங்கலாமா, மாத வருமானம் இரு நூற்றைம்பதில் சாக்பீஸ், கரன்ட், டஸ்டர் செலவு போக மீதம் எவ்வளவு வரும்? அதில் நான் என்னவெல்லாம் வாங்கலாம்... மேலே மேலே மத்யமா, ராஷ்ட்ரபாஷா வகுப்பு களுக்கு எவ்வளவு சம்பளம் கேட்கலாம்? என்றெல்லாம் தயிர்க்காரி போல் கற்பனை செய்தாள். கணக்குப் பார்த்தாள், கணித மேதை ராமானுஜம் படித்த பள்ளி மாணவி யான அவள்.

இதற்கிடையில் எங்கள் வீட்டு சி. பி. ஐ. எனப்படும் இரண்டாவது பெண், ஒரு முக்கி யமான செய்தியைக் கொண்டு வந்தாள். அதாவது ஹிந்தி ட்யூஷன் கற்கும் மாணவ மணிகளின் பெற்றோர், அதாவது அம்மாக்கள் வம்பு பேசுகையில், நான் ஏற் கெனவே ராஜம்மாமி பெண்ணுக்கு எக்ஸாம் டைமில் மேத்ஸும் இங்கிலீஷும் கற்றுக் கொடுத்த போது பணம் எதுவும் வாங்க வில்லை என்பதால் ஹிந்தி ட்யூஷனுக்கும் பணம் வாங்க மாட்டேன்... எல்லோரும் ஒரு தொகை சேர்த்து ஏதாவது பொருள் வாங்கித் தரணும்...' என்று தீர்மானித்தார்களாம்.

இந்தச் சேதியைக் கேட்டதும் பெரியவள், தானே தனக்கு நியமித்துக் கொண்ட 'ட்ரெ ஷரர்' பதவியை ராஜினாமா செய்தாள். எனக்குச் சற்று ஏமாற்றம்தான் என்றாலும், அவர்கள் தரப் போகிற கிஃப்ட் என்னவாய் இருக்கும்? மிக்ஸி, வாட்டர் ஃபில்டர் என்று கணிசமாய்ப் பணம் போட்டு வாங்கித் தரு

# பல்வலி வந்தால் நாம் நினைப்பது கடவுளை, இல்லாவிடில் கிராம்புத் தைலத்தை.

ஆம். பல் வலிக்கு தொன்றுதொட்டே இல்லந்தோறும் முக்கியமான ஒன்றாக இருந்து வருகிறது கிராம்புத் தைலம். மூலிகை வம்சத்திலேயே கிராம்பு, தனித்தன்மை வாய்ந்தது. இது மருந்துத் தன்மை உடையது. அதோடு குளுகுளு புத்துணர்ச்சியும். ஆகவேதான் இதற்கு பெருமைமிகு இடம் உண்டு —தினசரி உணவுகளிலே, மருத்துவ அறிவியலிலே, ஏன்...ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டிலும்.

ப்ராமிஸ் டூத்பேஸ்ட் மூலம் கிராம்புத் தைலத்தின் மருந்துத் தன்மை உங்கள் பற்களின் இடுக்குகளில் புகுந்து, பற்களின் வேர்வரை சென்று பலவீனப்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. இதனால் உங்கள் பற்கள் எப்போதும் ஆரோக்கியமாயும் உறுதியாயும் திகழ்கின்றன. ப்ராமிஸிலுள்ள இதர மூலப்பொருட்கள் பற்களை முத்துபோல பளிச்சிடச் செய்கின்றன. ப்ராமிஸ் கொண்டு பிரஷ் செய்தபின், நீங்கள் பேசும்போது வாசனை வீசுகிறது. ஏனெனில் கிராம்புத் தைலம் சுவாசத்தில் துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை வீழ்த்துகிறது. உங்கள் சுவாசம் புத்துணர்ச்சி பெறுகிறது.

ப்ராமிஸ் டூத்பேஸ்ட் மற்றும் கிராம்புத் தைலம், இரண்டும், டூத்பேஸ்ட் உலகிலேயே ஓர் இணைபிரியா ஜோடி எனலாம். ஆம், நீங்களும் இதை முறையாக உபயோகித்தால், கிராம்புத் தைலத்தை நினைக்க வேண்டாம். உங்களுக்குத் தேவையும் இராது. பற்கள் பளிச்சிடும், சுவாசத்தில் மணம் வீசும்.




**Promise**



கிராம்புத் தைலத்தின் அருமையான படைப்பு — ப்ராமிஸ் டூத்பேஸ்ட்.

பல்ஸாரா— டூத்பேஸ்ட் நிபுணர்கள்.

CHAITRA - B BLS 820 TAM

வார்களா? அல்லது கிலோ அறுபது ரூபாய் ரேட் எவர்சில்வர் சாமான் வாங்கிக் கொடுப்பார்களா? என்று யோசிக்கலானேன்.

என் மாணவர்கள் கலம், கிதாப், குர்ஸி, மேஜ் என்று வார்த்தைகள் கற்றுக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். வகுப்பு துவங்கிப் பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. நான் பந்தாவாய் பாலியஸ்டர் சேலை, மேட்சிங் ப்ளவுஸ், கொண்டையுடன் கையில் சிறு பிரம்பு. (இதற்குள் ப்ளாக் போர்டும் வாங்கி வந்து வைத்து விட்டார் என் கணவர்) போர்டில் வார்த்தைகளைச் சுட்டிக் காட்ட, அசல் 'ஹிந்தி அத்யாபிகா' ஆகிவிட்டேன். திருச்சி பிராந்திய சபையில் இருந்து அழகாய் உடனே தபால் வந்துவிட்டது. பிராத்மிக், மத்யமா போன்ற பரீட்சைகளுக்கு எவ்வளவு கட்டணம், எப்போது பணம் கட்ட வேண்டும், புத்தகம் ஒரு செட் எவ்வளவு, இருபது மாணவர்கள் போல் இருந்தால், அந்த இடத்தில் — சென்டர் வைத்துப் பரீட்சை நடத்த ஏற்பாடு செய்யப்படும், அருகில் பரீட்சை நடக்கும் சென்டர்கள், நான் பரீட்சைக்குப் பணம் வசூல் செய்து அனுப்பும் ஆசிரியையாக இருந்தால், நிறைய மாணவர்கள் பரீட்சை எழுதினால், எனக்குத் தரப்படும் கமிஷன், எல்லாம் விவரமாய் அனுப்பியிருந்தார்கள்.

அன்றைய வகுப்பிலேயே மாணவர்களை, இன்னும் இரண்டே மாதத்தில் வரும் பரீட்சைக்குத் தயார் செய்து விடுவதாயும், புத்தகம் வாங்க மறுநாள் பணம் கொண்டு வரும்படியும் கூறினேன். பணம் என்றதும் இரண்டு, மூன்று நாட்களாகியும் எல்லோரும் ஒன்று போல் மறந்து போய் கிளாஸுக்கு வந்தார்கள். நான் என் குழந்தைகளுக்கு முன்னதாய்ப் பணம் அனுப்பி வரவழைத்து விட்டால், பாடம் நடத்தத் துவங்கலாம். மற்றவர்கள் பணம் கட்டியதும் வாங்கலாம் என்று என் பாக்கெட் மணியில் ஐந்து செட் புத்தகம் வாங்கினேன். பக்கத்து வீட்டு மாமிகளிடம் அவர்கள் பிள்ளைகளுக்குக் கேட்டு வாங்கலாம் என்று, நான் என் கைப்பணத்தில் அவர்கள் பிள்ளைக்குப் புத்தகப் பணம் அனுப்பி விட்டதாயும் அவர்களைத் தரும்படியும் கேட்டவுடன், இருவரும் ஏதோ அவர்கள் வைரத் தோட்டைக்கழற்றித்தரும்படி கேட்டுவிட்டது போல் திடுக்கிட்டு, தங்கள் கணவரிடம் தான் பணம்கேட்க வேண்டும்என்று கூறிவிட்டார்கள்.

மறுநாள் ஹிந்தி வகுப்பில் மெதுவாய் "ப்ராத்மிக் புக்செட்" வரவழைக்கப் பணம் கொண்டு வரும்படி அறிவித்தேன். மூன்றாவது தெருவில் இருந்து வரும் நாலு பேரும் ஆப்சன்ட். அவர்களுடன் பள்ளியில் ஒரே வகுப்பில் படிக்கும் எங்கள் தெரு உமாவை விசாரித்தபோது, அவர்களுக்குப் பள்ளிக் கூட ஹோம் ஒர்க் செய்து, படிக்கவே டைம் போதவில்லை என்பதால் ஹிந்தி வகுப்பைப் புறக்கணித்து விட்டார்கள் என்று தெரிந்தது.

பிராத்மிக் புத்தகங்கள் ஐந்து செட்டும் வந்துவிட்டன. இரண்டு செட் என் பெண்களுக்கு வைத்துக் கொண்டு மீதி மூன்றையும் முதலில் பணம் கொடுப்பவர்களுக்குக் கொடுத்து விடுகிறேன் என்றேன். வாரம் ஒன்று ஓடியும், முதல் புத்தகத்தில் இரண்டு பாடம் நடத்தி முடிந்தும் ஒருவரும் புத்தகத்திற்குப் பணம் கட்டவில்லை. அன்று மிக எரிச்சலுடன், எல்லோரையும் உடனே புக் வாங்கச் சொல்ல வேண்டும் என்று மாலை வகுப்புக்குத் தயாரானேன்.

---

**சாதாரணமாக நம் வீடுகளில் சாமி கும்பிடும் பொழுது ஊதுபத்திகளை வாழைப்பழங்களில் குத்தி வைத்துவிடுகிறார்கள். சாமி கும்பிட்ட பின்னர் அந்த வாழைப் பழங்களை எடுத்து அப்படியே குழந்தைகளுக்குச் சாப்பிடக் கொடுத்து விடுகிறார்கள்.**

**ஊதுபத்திக் குச்சிகளுக்குப் பூசப்படும் ரசாயனம் கலந்த சாயம் பழத்தில் படிந்திருக்கும். குச்சிகளின் நிறத்திற்காகப் பூசப்பட்ட சாயம், குழந்தையின் வயிற்றிற்குள் போகும்பொழுது பலதொல்லைகளைக் கொடுக்கிறது. சிறு குழந்தைகள் அதனால் பாதிக்கப்படும்பொழுது, எதனால் என்பது பலருக்குப்புரிவதில்லை! அப்பகுதிகளை நீக்கியாவது தரலாம்.**

**— சுமதி.**

---

நாளுக்கு நாள் வகுப்பின் மாணவர் எண்ணிக்கை குறையலாயிற்று. அதுவும் பாடம் நடத்திக் கேள்வி பதில் கொடுத்த மறுநாளே ஒப்புவிக்க வேண்டும் என்றும், ஹோம் ஒர்க்காக மூன்று முறை கேள்வி பதில் எழுத வேண்டும் என்றும், கண்டிப்புப் பேர்வழியாய் நான் கட்டளைப் பிறப்பித்ததால் ஒவ்வொருவராய் வகுப்பிற்கு வருவதை நிறுத்திக் கொண்டார்கள்.

"என்ன ஹிந்தி டீச்சரம்மா? ஸ்டூடண்ட்ஸ் எல்லாம் எப்படி?" — என்று இவர் கண் சிமிட்டிக் கேட்க ரோஷமாய், "கிடக்கிறது. முட்டாள் ஸ்டூடண்ட்ஸ்... எவ்வளவு நன்றாய்ப் படித்துப் பரீட்சை எழுத கோச் செய்தேன்! அவர்கள் எல்லாரும் வெட்கப்படும் படி நம் பெண்கள் இருவரையும் பரீட்சை எழுதி ஃபர்ஸ்ட் கிளாஸில் பாஸ் செய்ய வைக்கிறேன்" என்று சபதம் செய்தேன்.

இந்தத் 'தாயின் சபதம்' வெற்றி பெறுவதைப் பொறுக்காத, என் சோம்பேறிப் பெண்களும், "ஸ்கூல் பாடம் படிக்கவே டைம் போறலே. எக்ஸாம் வர்றது. இந்த ஹிந்தி ஒரே குழப்பலாய் இருக்கு... அஃறிணைக்கெல்லாம் ஜெண்டர் போட்டு கி போடறதா, 'கா' போடறதான்னு கன்ஃப்யூஷன்... நாங்கள் ஹிந்தி படிக்கலே. ப்ளீஸ், விடும்மா!" என்று பின்வாங்கியதால் என் ஹிந்தி வகுப்பு அல்பாயுளில் மடிந்து போனது.

"ஐந்து செட் புக் வரவழைச்சிருக்கியே... ஒண்ணு செய்... நீயே மறுபடி படித்து மறுபடி பரீட்சை எழுது...!" என்று இவர் நமட்டுச் சிரிப்புடன் கமெண்ட் அடித்த போது, நைஸாய்ச் சமையற்கட்டில் நுழைந்து விட்டேன், நான்.

